[Sri N. Annamalai Pillai] [22nd March 1960

கொளுத்திக் கரியாகச் செய்து, அதை பஸ்களுக்கும், அடுப்பு களுக்கும் போட்டு எரித்துவிட்டார்கள், அதனுல்தான் புளிப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்கிருர்கள். எது எப்படியிருந்தபோதிலும், அந்தப் பஞ்சத்தை நிவர்த்தி செய்ய வழிவகை கண்டுபிடிக்க வேண்டும். அதை, ரசாயன சாஸ்திரிகள் மூலம் ஆராய்ந்து இந்தப் பஞ்சத்தை எந்தவிதமாக நிவர்த்தி செய்ய முடியும் என்று ஆலோசித்து, பஞ்சத்தை நீக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

4-30 p.m. போலீஸ் இலாகாவைப் பொறுத்த வரையில், நல்ல முறையில் தான் சிலர் வேலே செய்து வருகிருர்கள். உயர்ந்த அதிகாரிகள் எல்லாம் நல்ல வேலே செய்துவருகிருர்கள். ஆனுல், கீழே இருக்கின்ற சில அதிகாரிகள் சரியாக நடந்துவருவதில்லே என்று சொல்வது மிகையாகாது என்று கருதுகிறேன். அவர்கள் நாட்டுக்கு நல்ல பணி செய்ய வேண்டியவர்களாக இருக்கிருர்கள். அவர்களே நம்பித்தான் நாட்டில் மக்கள் வாழ்ந்துகொண்டிருக் கிருர்கள். அப்படி நம்பி வாழக்கூடிய மக்களுக்குத் துரோகம் செய்யக் கூடிய வகையில் அவர்கள் நடந்துகொண்டிருப்பார் களானுல், அது சகிக்க முடியாத ஒரு காரியமாகும். பெரிய அதிகாரிகளாய் இருப்பவர்கள் இதற்காகப் பள்ளிக்கூடங்களே ஏற்படுத்தியாவது தினம் தினம் ஜனங்களிடத்தில் எப்படிப் பழகு வது என்பதைப்பற்றியும் ஒழுக்கத்தைப்பற்றியும் கற்றுக் கொள்ளக்கூடிய வகையில் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதற்கு அமைச்சர் அவர்களும் வேண்டிய ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

சிலர் மதுவிலக்கைப்பற்றிக் குறிப்பிடும்போது, அது மிகவும் தோற்றுப்போய்விட்டது என்று சொல்கிருர்கள். மதுவிலக்கு வெற்றிகரமாக நடந்துகொண்டிருப்பதனுல், நாட்டில் பல ஆயிரக்கணக்கான மக்கள் சுகமாக வாழ்ந்துகொண்டிருக்கிருர் கள். குற்ற பரம்பரையிலுள்ளவர்கள் இப்போதும் இருந்து கொண்டிருக்கிருர்கள். நாட்டில் குற்றங்கள் நடந்துகொண்டி ருக்கின்றன என்றுலும் அதற்காகக் கிரிமினல் சட்டத்தையே எடுத்துவிடுவது என்று சொல்வது பொருத்தமாகாது. அது போல், மதுவிலக்கு இருந்தால்தான், நாட்டில் சாதாரண ஜனங் கள் சுபிட்சமாக வாழ முடியும். மதுவிலக்கு இன்று இருந்து கொண்டிருப்பதினுல், விலேவாசிகள் எல்லாம் உயர்ந்துகொண் டிருந்தாலும், இந்த நேரத்தில் ஜனங்கள் சுபிட்சமாக வாழ் கிருர்கள். ஆகவே, இந்தத் திட்டத்தை இன்னும் நன்ருகச் செயலாற்றுவதற்கு வழிவகை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மற்ருெரு விஷயத்தைச் சொல்ல விரும்பு கிறேன். திருச்சி ஜில்லாவில் பேட்டைவாய்த்தலே என்ற இடத் தில் ஒரு சர்க்கரை ஆலே இருக்கிறது. அந்த ஆலேயிலுள்ள தொழிலாளர்கள் இப்போது வேலே நிறுத்தம் செய்து கொண்டிருக்கிருர்கள். கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த

22nd March 1960] [Sri N. Annamalai Pillai]

வர்களும் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்களும் ஒன்றுகச் சேர்ந்துகொண்டு தாங்கள்தான் இந்த வேலை நிறுத்தத்திற்குரியவர்கள் என்று சொல்லிக்கொண்டிருக்கிறுர்கள். அவர்கள் அரசாங்கத்தினிடத்திலும் வந்து பேசிவிட்டுப் போயிருக்கிறுர்கள். இந்த வேலை நிறுத்தத்தை முடிப்பதற்காக இங்கு வந்திருக்கிறுர்கள். ஏன் இந்த வேலை நிறுத்தம் ஏற்பட்டிருக்கிறது என்றுல், அரசாங்கத்தின்மீது எப்படியாவது கெட்ட எண்ணத்தைப் பரப்பிவிட வேண்டும் என்றும், எலக்ஷனில் காங்கிரசைத் தோற்கடிக்க வேண்டுமென்ற ஒரு வகை எண்ணமும்தான் அவர்களுக்கு இருந்து வருகிறது. ஆனுல் அந்த ஆலையில் நாள் ஒன்றுக்கு 800 டன் கரும்பு வந்து சேருகிறது. அந்த ஆலையில் சுமார் 600 டன் சர்க்கரை உற்பத்தியாகிறது. சர்க்கரை கிடைக்காமல் ஜனங்கள் எவ்வளவோ கஷ்டப்படுகிறுர்கள். அப்படியிருக்கின்ற இந்தக் காலத்தில் இவர்கள் இந்தத் தீய காரியத்தைச் செய்துகொண்டிருக்கிறுர்கள். கல்லாத பேர்களே நல்லவர்கள் என்றும் கற்றும் அறிவிலாதார், இந்தக் கருமத்தை என்ன செய்வேன் என்ற கருத்தைத் தாயுமான சுவாமிகள் இவர்களைப் பார்த்துத்தான் பாடி வைத்தார்களோ என்னவோ தெரியவில்லை. படித்தவர்கள்தான் அறிவிலாதார் என்ற முறையில் படித்த சிலர்தான் அங்கு வந்து இந்த வேலைகளையெல்லாம் செய்துகொண்டிருக்கிறுர்கள். இதை நாம் மன்னிக்க முடியாது. அரசாங்கம் இதில் தலையிட்டு ஏதாவது வழிவகை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதில் வேலை நிறுத்தம் செய்தது சரியல்ல என்று கமிஷனர், லேபர் ஆபீஸர் ஆகியவர்கள் சொல்லிவிட்டார்கள் என்று தெரிகிறது. ஆனதினுல், சர்க்கார் இதில் தலையிட முடியாமல் இருக்கிறது என்றும் கேள்விப்படுகிறேன். ஒரு ஆலை ஆரம்பித்து இரண்டு வருடங்களுக்குள் ஏதாவது தகராறுகள் ஏற்பட்டால், சர்க்கார் தலையிடுவது உசிதமல்ல என்றும் அரசாங்கம் இஷ்டப் பட்டால், அதில் தலையிடலாம் என்றும் சட்டத்தில் சொல்லப் பட்டிருப்பதாகத் தெரிகிறது. அரசாங்கம் இஷ்டப்பட்டால் தலையிடலாம் என்று இருப்பதை வைத்துக்கொண்டு அரசாங்கம் இதில் தலையிட்டு, உடனடியாக ஏதாவது தகுந்த முடிவு எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்விதம் நாட்டுக்குத் தீங்கு செய்துகொண்டிருக்கும் இவர்கள், வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்று வெறும் கூச்சல் போட்டுக்கொண்டிருக்கிற இவர்கள், இந்த நாட்டில் வளருகின்ற தொழிலுக்குப் பங்கம் விளைவித்துக் கொண்டு மேலும் தீய காரியங்களைச் செய்துகொண்டிருக்கிறுர்கள். இந்த அடாத செயலைச் செய்துகொண்டிருப்பவர்கள் மீது என்ன நடவடிக்கை எடுக்க முடியும் என்பதை ஆலோசித்து அவர்கள் மீது தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஒரு தனிச் சட்டம் கொண்டுவந்தாவது அநீதிச் செயலைத் தடுத்து, இம்மாதிரியான காரியங்கள் நடைபெறுமல் செய்யவேண்டும். இந்த நாட்டில் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்ற தொழில் முன்னேற்றத்தைத் தடுத்தும்,

தொழில்களை நாசப்படுத்துகின்ற இந்த நாசக்காரர்களை அடக்கு வதற்கு ஏதாவது வழி செய்து, ஒரு சட்டத்தின் மூலமாகவாவது, நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

பஸ் தொழிலைப் பொறுத்த வரையில், டவுனில் இப்போது பஸ் சர்வீஸை எல்லாம் சர்க்கார் நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கின்ற நேரத்தில் சர்க்கார் நடத்தினுல் இதில் நஷ்டம் வந்துவிடும், தொழிலாளர்கள் சரியாக வேலை செய்ய மாட்டார்கள் என்றெல்லாம் பஸ் ஓனர்கள் குறுக்கே கோணை யாக ஏதாவது சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். அதையெல்லாம் கவனிக்காமல் டவுனில் ஐந்து மைலோ அல்லது பத்து மைல் களோ இருக்கும் தூரத்திற்கு எல்லாம் பஸ்களை விடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

உர விஷயத்தைப்பற்றி இங்கு பலர் பல கருத்துக்களைச் சொன்னுர்கள். அதற்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. ஆனுல், இதற்கு "கார்டு ஸிஸ்டம்" கொண்டுவந்தால் நல்லது என்று நான் கருதுகின்றேன். சர்க்கரைக்குக் கஷ்டம் ஏற்பட்ட சமயத்தில் இம்மாதிரியான கார்டு ஸிஸ்டத்தைக் கொண்டு வந்ததால் சரியாக நடைபெருது என்று பல ஆலைச் சொந்தக் காரர்கள், வியாபாரிகள் எதிர்த்தார்கள். ஆனுல் எங்கள் ஜில்லா கலெக்டர் அவர்களும் அமைச்சர் கனம் திரு. பக்தவத் சலம் அவர்களும் இந்த முறையைக் கொண்டுவந்ததினுல், இப்போது சர்க்கரையைப் பொது ஜனங்கள் சல்லிசாக வாங்கிக் கொண்டிருக்கிருர்கள். அதே போன்று உரத்திற்கும் கார்டு முறையைக் கொண்டுவந்துவிட்டால், இந்தக் கஷ்டம் தீர்ந்து போய்விடும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும், எலக்ட்ரிஸிட்டியைப் பொருத்தவரையில், இப் போது எங்கு பார்த்தாலும் மின்சாரம் கிடைத்துக்கொண்டிருக் கிறது. ஏராளமான கிராமங்களுக்கு மின்சாரம் போய்க்கொண் டிருக்கிறது. காந்திஜி கண்ட கனவு இப்போதுதான் நினைவாக மாறிக்கொண்டிருக்கின்றது. கிராமங்களெல்லாம் பட்டணங் களாகத் திகழ வேண்டும் என்று காந்திஜி ஒரு பிரசங்கத்தில் சொன்னுர்கள். அந்த வார்த்தையானது இப்போதுதான் மெய்யாகிக்கொண்டிருக்கிறது. கிராமங்களில் எல்லாம் விளக்குகள் போடப்பட்டு, எங்கு பார்த்தாலும் லைட்கள் எரிவது மட்டுமல்லாமல், விவசாயத்திற்கும் பெருமளவு மின்சாரத்தை உபயோகித்துக்கொண்டிருக்கிற நிலைமையை நாம் இன்று காண் கிருேம். விவசாயத்திற்கு மின்சாரத்தை உபயோகப்படுத்துகிற விஷயத்தில், இப்போது வாங்கும் கட்டணம் உயர்ந்ததாக இருக்கிறது. அதாவது, ஒரு ஹார்ஸ் பவர்க்கு 50 ரூபாய் என்று வாங்கிக்கொண்டிருக்கிருர்கள். அது மிகவும் ஜாஸ்தி என்று எல்லோரும் சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். அது மட்டுமல்ல. இதன் மூலம் சர்க்காருக்கு லாபம் வந்துகொண்டிருக்கிறது, நஷ்டம் ஒருக்காலும் வராது. ஆகவே, இப்போது 50 ரூபாய் என்றிருப்பதை மாற்றி முப்பது ரூபாய் என்று நிர்ணயிக்க

வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதைப்பற்றி சர்க்கார் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* Sri V. V. RAMASWAMI: மன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த சட்ட மன்றத்திலே, நிதி நிலை அறிக்கையைப் பற்றி இன்று யான் பேசுவது இறுதியான பேச்சு என்பதனாலும், தாங்கள் இது வரை அன்புகூர்ந்து எனக்கு அளித்துவந்த ஆதரவினாலும் கொஞ்சம் அதிக நேரம் பேசுவதற்கு அனுமதி அளிக்க வேண்டும் என்று மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். இந்த மன்றத்திலுள்ள எல்லா உறுப்பினர்களும், அமைச்சர்களும் இதுகாறும் எனக்குக் காட்டிவந்த அன்பிற்கும் ஆதரவிற்கும் நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இந்த மன்றத்தில் நான் கடந்த ஆறு ஆண்டுகளாக அங்கம் வகித்து, பல நிகழ்ச்சிகளிலும் பங்கு எடுத்துக்கொண்டதன் பலனாக ஏற்பட்ட நல்லெண்ணத்தையும் அனுபவங்களையும் நான் என்றும் மறக்க மாட்டேன். எனது வாழ்நாளில் எஞ்சிய காலத்திலே மதிப்பிற்குரிய அங்கத்தினர்களைக்கொண்ட இச் சபையில் கிடைத்த அரசியல் அனுபவமும், பல்வேறு கட்சியினர்களுடன் பழகுவதால் ஏற்படுகின்ற சமரச மனப்பான்மையும் எனக்கு மிகவும் உறுதுணையாக இருக்கும் என்று நம்புகிறேன். 4-40 p.m.

இவ்வாண்டில் புதிதாக எந்த வரிகளும் போடப்படவில்லை. காரணம் எதுவாயினும் வரவேற்கத் தக்கதுதான். ஆனால், எதிர்பார்க்கப்படுகின்ற செலவினங்களுக்காக 10 கோடி ரூபாய் அளவுக்குக் கடன் எழுப்ப முடிவு செய்திருப்பதாகக் காணப் படுகிறது. பொதுவாக பல்வேறு வளர்ச்சி வேலைகளின் காரணமாக, பொதுத் துறையிலும், தனியார் துறையிலும் ஏராளமான பணம் செலவிடப்படுகின்றது. அதன் நிமித்தமாக மக்களிடத்திலே பரவலாக வாங்கும் சக்தி உயர்வதாகச் சொல்லப்படுகிறது. ஆகையால், இத்துடன் முழுவதும் கிடைத்துவிடும்.

இப்போது காட்டப்பட்டிருக்கிற வரவு-செலவுத் திட்டத் திலே 34 லட்சம் ரூபாய் துண்டு விழுகிறது என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனால் சம்பளக் கமிஷன் செய்யவிருக்கும் சிபாரிசுகளையொட்டி ஏற்படவிருக்கும் செலவுத் தொகைகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டால், இன்னும் அதிகமான அளவுக் குத் துண்டு விழும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்து அரசாங்கச் சிப்பந்திகளுக்கு இப்பொழுது கொடுக்கப்பட்டு வரும் சம்பள விகிதம் கட்டாயம் அதிகரிக்கப்படும் என்று உறுதி யாகக் கொள்ளலாம். அது ஏப்படி அமையும் என்பதைப் பின்னால்தான் அறிய முடியும். இந்தக் கட்டத்தில் ஒரு கருத்தைச் சொல்ல விரும்புகிறேன். மத்திய அரசாங்கச் சிப்பந்திகளுக்கும் நமது அரசாங்கச் சிப்பந்திகளுக்கும் சம்பள விகிதத்தில் பேதம் இருக்குமானால், எப்பொழுதும் மனக்கசப்பும் திருப்தியின்மையும் இருந்துகொண்டேதான் இருக்கும். தகுதியும், திறமையும், இடமும், பொறுப்பும் ஒரே மாதிரியாக இருந்தபோதிலும், இரண்டு அரசாங்கச் சிப்பந்திகளிடத்தில்—ஒரே குடும்பத்தில்

கூடுதல்-குறைவு இருக்குமானால், எவ்வளவு சங்கடமாக இருக்கும் என்பதை நாம் உணர வேண்டும். ஆகவே, சம்பளத்தை எவ்வளவு உயர்த்திக் கொடுத்தாலும், இந்த பேதம் நீங்கா விட்டால், எப்பொழுதும் நமது சிப்பந்திகளிடையே மனக்கசப்பு இருந்துகொண்டேதான் இருக்கும். மத்திய அரசாங்கத்தி னுடைய அநேக அலுவல்களை நமது அரசாங்கத்தின் அமைப் புகள் மூலமாக இயங்கும்படிச் செய்யலாம். அதற்கு அரசிய லமைப்புச் சட்டத்திலும் அனுமதியிருக்கிறது. இப்படி அலுவல் களையும், அதற்குரிய சிப்பந்திகளையும் மத்திய அரசாங்கம் குறைத்துக்கொண்டால், அதனால் ஏற்படுகின்ற மிச்சத்தை நம் அரசாங்கத்திற்குக் கொடுத்து உதவினால், நம்முடைய சிப்பந்தி களுக்கும் கூடுதலாகக் கொடுத்து நிறைவுபடுத்த வழி ஏற்படலாம். இதையும் சிந்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த வரவு-செலவுக் குறிப்பில் எனக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பது ஒரு வரிச் சலுகை. அதாவது காய்கறி முதலிய ஒன்பது இனங்களுக்கும், உள்நாட்டுச் செக்கு எண்ணெக்கும் தேயிலை பசுந்தழைக்கும் விற்பனை வரி நீக்கப்பட்டிருக்கிறது. இந்த விற்பனை வரிச் சட்டமானது இந்த மன்றத்தில் நிறை வேற்றப்படும் நேரத்தில், நான் இந்தச் சட்ட மன்றத்தின் மூலமாகவும், வெளியிலும், அழுகும் பொருள்களுக்கு வரிச் சலுகை கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கிறேன். இந்த மன்றத்திலே விற்பனை வரி அமைச்சரும், நமது சபை முதல்வரும் இந்த வரி விதிப்பின் போக்கை ஓராண்டு கவனித்து, அவசியமானால் பின்னர் விலக்குத் தருவதைப்பற்றி ஆலோசிக்கப் படும் என்று உறுதிமொழி தந்தார்கள். ஆகவே, அதன்படி பொது மக்களின் விருப்புக்கேற்ப, இப்போது வரி விலக்கு ஏற்படுத்தியதற்கு நன்றி. இந்த மன்றத்திலே நான் பல முறை கேட்டுக்கொண்டதைப் போல, பால் மீது போட்டிருக்கக் கூடிய வரியை நீக்க வேண்டுமென்றும், உணவுப் பொருள்களின் மீது இருக்கக்கூடிய வரியை முழுவதும் நீக்காவிட்டாலும், ஒரு கட்டத்தில் வசூலிக்கும் முறையையாவது கடைப்பிடிக்கவேண்டு மென்றும் மீண்டும் அழுத்தமாக வலியுறுத்திக் கேட்டுக் கொள்கிறேன்.

கல்வி சம்பந்தப்பட்ட மட்டில், நமது முதலமைச்சர் அவர்கள் எல்லா மாணவர்களுக்கும் ஆரம்பத்திலிருந்து 10-ம் படிவம் முடிய இலவசமாகக் கல்வி கற்க வசதி செய்து கொடுக்க வேண்டு மென்பதே தன்னுடைய விருப்பம் என்று பல தடவைகளில் குறிப் பிட்டிருக்கிறார்கள். அது சம்பந்தமாக அரசாங்கத்தின் முடிவு என்ன என்பது இந்தத் திட்டத்தில் காணவில்லை. அதைப்பற்றி அறிவிக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்து, நான் மிகவும் முக்கியமாகக் கருதும் பனைச் செல்வத்தைப்பற்றிச் சிறிது சொல்ல விரும்புகிறேன். பனை, தென்னை, ஈச்சை, சாகோ போன்ற மரங்களைப் பனைச் சாதி என்று சொல்கிறார்கள். இந்தப் பனைச் சாதி மரங்களினால் கிடைக்கும் எல்லாப் பொருள்களையும், குறிப்பாகப் பனை மரத்

22nd March 1960] [Sri V. V. Ramaswami]

திலிருந்து கிடைக்கும்—அதாவது, அதன் அடித் தூரிலிருந்து உச்சி நுனிவரையில் கிடைக்கும்—எல்லாச் சாமான்களையும் பயன் படுத்துவதற்குரிய எல்லா அபிவிருத்திக் காரியங்களும் நமது தொழில் இலாகா டைரக்டர் அவர்களால் எடுத்துக்கொள்ளப் பட்டு வருகின்றன. இப்படி நமது அரசாங்கம் கொடுக்கும் நிதி யுடன் பெரும் பகுதி அகில-இந்திய கிராமக் கைத்தொழில் கமிஷ னிடத்திலிருந்து கிடைக்கப் பெருகிறது. இந்தத் தொழிலில் அடிப்படையாக ஈடுபட்டிருக்கின்றவர்கள் மரமேறும் உற்பத்தி யாளர்கள். இவர்களுக்குச் சொந்தமாக மரமும் கிடையாது, நிலமும் கிடையாது. ஆண்டுதோறும் சுழன்று வரும் கடன் பட்டவர்களாக இருக்கிறார்கள். இவர்களுடைய பிரச்சினையை, பனை மர விவசாயிகள் என்ற முறையிலே பரிசீலித்து அவர் களுக்கு மரமும் நிலமும் உடைமையாக்கப்பட்டு கடன் பளுவையும் நீக்கி சமுதாயத்திலே ஓர் நல்ல அங்கமாக விளங்கும்படி அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும். இதைப்பற்றி நான் சென்ற டிசம்பர் மாதத்தில், கவர்னர் அவர்களின் உரையின் மீது நடந்த விவாதத்தில் பேசியபோது, விரிவாகக் குறிப்பிட்டிருக்கின்றேன். அதோடு எனது கருத்துக்களை ஒரு அறிக்கையின் மூலமாக நமது முதலமைச்சர் அவர்களுக்கு எழுதிக் கொடுத்திருக்கிறேன். அது நன்கு ஆராய்ந்து பார்க்கப்பட்டு, தக்க நடவடிக்கைகள் எடுக்கப் படும் என்று எதிர்பார்க்கிறேன். நமது இராச்சியத்தில் நடை முறையில் இருக்கும் பூரண மதுவிலக்கு சரியாக நடைபெறு கிறது என்பதை ஒப்புக்கொள்கிறேன். கள்ளத்தனமாக மதுப் பொருள்களைத் தயாரிப்பவர்கள்மீது நல்ல நடவடிக்கை எடுத்து வருவதனால், இந்தக் குறைகளும் குறைந்துகொண்டு வருகின்றன என்று அறிகிறோம். போலீஸ் இலாகாவினால் கண்டுபிடிக்கப் படும் இந்தக் குற்றங்களினால் சம்பந்தப்பட்டவர்கள் கள்ளத்தன மாகக் கள் உற்பத்தி செய்கின்றவர் என்ற குற்றச்சாட்டு அநேக மாக இல்லை என்றே பெருமையாகக் கூறுகின்றேன். பதனீரை அப்படி விற்பதுமல்லாமல், அதை வெல்லமாகவும் தயாரித்து உற்பத்தியைப் பெருக்குகிறார்கள். ஆகவே, இப்படி உண்மை யாகவும் நேர்மையாகவும் உழைக்கின்ற மக்களுக்குக் கருப்புக் கட்டி செய்வதற்கு வசதி இல்லாத பிராந்தியங்களில் பருவ காலங்களில் ஒரு மாதத்திற்கு முன்பும் ஒரு மாதத்திற்குப் பின்பும் பதனீர் விற்பதற்கு லைஸென்ஸ் நீடித்து இருக்க வேண்டும் என் பதையும் வலியுறுத்துகின்றேன். இந்தப் பனைச் சாதி மரங் களினால் என்ன சாமான்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன என் பதைச் சில குறிப்பிட்ட மாவட்டங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட நிலையங்களில்தான் பார்க்க முடியும். ஆனால், மாநிலத்தில் இருக்கும் மக்கள் பூராவும் பார்ப்பதற்கும் வட நாட்டில் இருந்தும், வெளிநாடுகளிலிருந்தும் வரும் மக்கள் பார்க்கும் வண்ணம் ஒரு பனைப் பொருள் தொழிற்கூடம் சென்னை நகருக்கு அருகாமையில் நிறுவப்பட வேண்டும் என்று குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகிறேன்.

மேலும், இன்னொன்றும் சொல்ல விரும்புகிறேன். திருநெல் வேலி, ராமநாதபுரம் மாவட்டங்களில் பதனீர் விற்பதற்குத் தாராளமாக அனுமதி கொடுக்கப்படுகிறது. அதே போன்று

[Sri V. V. Ramaswami] [22nd March 1960

எல்லா மாவட்டங்களுக்கும் லைசென்ஸ் வழங்கப்பட வேண்டும் என்று ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள பனைவெல்லக் கூட்டுறவுச் சங்கங்கள் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் விண்ணப்பித்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த விதமாக அனுமதி கொடுப்பதில் போலீஸ் இலாகாவினர் முட்டுக்கட்டையாக இருப்பதாக அறிகிறேன். எங்கள் பனை வெல்லக் கூட்டுறவுச் சங்கங்களில் அநேகமாக மரம் ஏறுபவர்கள் எல்லோரும் உறுப்பினர்களாக இருக்கின்றார்கள். அவர்கள் வேண்டு மென்றோ அல்லது லாபத்தை உத்தேசித்தோ கள் உற்பத்தி செய்யமாட்டார்கள் என்று உறுதி கொடுக்கிறேன். பதனீர் விற்பதில் நேரம் ஆகி விட்டால் அது கள்ளாக மாறிவிடுகின்றது என்பது எல்லோருக்கும் தெரிந்தது தான். அதை வைத்துத்தான் ஏதாவது குற்றம் சாட்டப்படுகின்றதே அன்றி, மற்றப்படி கள் உற்பத்தி செய்து விற்பதாகத் தெரியவில்லை. சென்னை நகரிலே இரண்டு சங்கங்கள் இருக்கின்றன. அவைகளில் 40 நபர்கள் பதனீர் இறக்குகின்றார்கள். பருவ ஆரம்பத்தில் நாள் ஒன்றுக்கு 400 படிகளும் போகப் போக நாள் ஒன்றுக்கு 1,500 படி வரையிலும் உற்பத்தி செய்ய முடியும். நான் தலைமை வகிக்கும் மாநிலக் கூட்டுறவு சம்மேளனத்தின் சார்பாக, இந்தப் பதனீரை வாங்கி நகரிலே வினியோகம் செய்து வருகிறோம். ஆனால், எங்கள் சங்கத்திற்கு இருக்கின்ற வசதியைக்கொண்டு, ஒரு நாளைக்கு 400 படிக்கு மேல் வாங்கி விற்க முடியாத நிலையில் இருக்கின்றோம். ஆகவே, மிஞ்சுவதை அவர்கள் விற்க முடியா மல் கீழே கொட்ட வேண்டிய அவல நிலை ஏற்படுகிறது. உற்பத்தியாகும் பதனீர் அனைத்தையும் வாங்குவதற்கு ஏற்பாடு செய்துகொண்டிருக்கின்றோம். அதற்கு நமது அரசாங்கம் நிறையப் பணம் கொடுத்து உதவ வேண்டும். இருந்தாலும், ஒரு ஆண்டு செல்லும். ஆகவே, அதுவரையும் உற்பத்தி செய் கிறவர்கள் பதனீராகத் தாங்களே குறிப்பிட்ட இடங்களில் விற்றுக்கொள்வதற்கு அனுமதி கொடுக்க அரசாங்கம் முன்வர வேண்டும். இக்காரியத்தில் போலீஸ் இலாகாவும் மற்ற அதிகாரிகளும் தயக்கம் இல்லாமல் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சென்ற டிசம்பர் மாதம் 14-ம் தேதி நடைபெற்ற இம் மன்றக் கூட்டத்தில் நான் ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்து பேசினேன். அதாவது சென்னை நகரில் வேலையிலுள்ள அரசாங்க ஊழியர்களுக்காகச் சென்னை நகரில் வீடுகளைக் கட்டிக் கொடுக்க வேண்டுமென்பது அந்தத் தீர்மானம். அந்தத் தீர்மானத்தின் மீது நடந்த விவாதத்திற்குப் பதிலளிக்கையில் அமைச்சர் அவர் கள் 5 கோடி ரூபாய் செலவில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இதற்கு மிகவும் பெரியதொரு திட்டம் இருப்ப தாகச் சொன்னார். அமைச்சர் அவர்கள் சொல்லியபடி, மூன்றாவது திட்டத்திலே இந்த ஐந்து கோடி ரூபாய் செலவில் வீடு கட்டும் திட்டம் சேர்க்கப்பட்டிருக்கிறதா இல்லையா என்று தெரிய விரும்புகிறேன். ஆண்டுக்கு ஒரு குடியிருப்பாகச் சென்னை நகரைச் சார்ந்த இடங்களில் குட்டி நகரங்களாக உண்டாக்கி வந்தால், இந்தப் பிரச்னை இலகுவாகத் தீர்ந்துவிடும் என்று நம்புகிறேன்.

22nd March 1960] [Sri V. V. Ramaswami]

அரசாங்க ஊழியர்களுக்கு வீடு கட்டும் அவசியத்தைப்பற்றிப் பேசினேன். இப்பொழுது நாம் கூடியிருக்கும் இந்த மன்றம் எவ்வளவு நெருக்கடியாகவும் கொஞ்சமும் வசதியில்லாததாக வும் இருக்கிறது என்பதை எல்லோரும் உணர்கின்றோம். நமது சபையின் முதல்வரும், நமது மன்றத் தலைவர் அவர்களும் இதை நன்கு உணர்ந்திருக்கிறார்கள். நம்மைப் போன்ற உறுப்பினர் களுக்கு ஒரு நேரம் வந்தால் வசதியாக உட்காருவதற்கும் ஏதா வது அலுவல் பார்க்கவும் தனி அறையும் கிடையாது, வேறு வசதிகளும் இல்லை. உறுப்பினர்களைத் தங்கள் நண்பர்கள் வந்தால், பார்ப்பதற்கு இடம் இல்லை. நமது கவுன்ஸிலின் அலுவலகம் இருக்கும் இட நெருக்கடியைப் பார்த்தால், மிகவும் வேதனையாக இருக்கிறது. சபை கூடும் காலங்களில் அலுவல கங்களிலே உதவியாகத் தாற்காலிகமாக அநேக அலுவலர்கள் நியமிக்கப்படுகிறார்கள். அவர்கள் கொஞ்சமும் வசதியில்லாமல் உட்கார்ந்து வேலை பார்ப்பதில் இருக்கிற சங்கடத்தை யாரிடத்தில் போய் நொந்துக்கொள்வது என்று தெரியவில்லை. நமது மன்றத்திற்குத் தனியாக ஒரு கட்டிடம் கட்ட வேண்டு மென்று ஒரு முடிவு எடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இந்த முடிவு எடுக்கும்போது, நிதி, தொழில், மராமத்து அமைச்சர்கள் மூவரும், மன்றத் தலைவரும், தலைமைச் செயலாளரும், கட்டிட இலாகா தலைமை அதிகாரிகளும் இருந்து முடிவு செய்திருக் கிறார்கள். பின் ஏன் இந்தத் தாமதம்? பழைய கட்டிடத்தை யும் எடுத்துவிடுவதற்கு மத்திய சர்க்காரின் அனுமதியும் கிடைத்துவிட்டதாகத் தெரிகிறது. எனவே, இதனை நமது மன்றத் தலைவரும், முதல்வரும், நிதி அமைச்சரும், முதலமைச் சரும் உடனடியாகக் கவனித்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அத்துடன் கவுன்ஸிலின் அலுவலகம் தனித்தியங்க வேண்டும் என்ற முடிவும் சீக்கிரம் செயலில் வரும் என்று எதிர்பார்க்கின்றேன். 4-50 p.m.

முதல் நாள் விவாதத்தில் பங்கு கொண்ட நண்பர் திருவாளர் கோசல்ராம் அவர்கள் சொல்லிய கருத்துக்களை மிகவும் கவன மாகக் கேட்டேன். அவர் எந்தக் காரியமும் யாருக்கும் தாமத மில்லாமல் நடைபெற வேண்டுமென்ற துடிதுடிப்பு உள்ளவர். மக்களின் பிரதிநிதிகளாகிய சட்டசபை உறுப்பினர்களுக்கு, எந்த அதிகாரியையும் பார்ப்பதற்கும் தங்களுக்குத் தெரிந்த காரியத்தை எடுத்துரைக்கவும் உரிமை உண்டு என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால், சட்ட சபை உறுப்பினர்களோ செல்வாக்குப் பெற்ற அரசியல் வாதிகளோ தங்கள் விருப்பப்படி தான் நிர்வாகம் நடக்க வேண்டும் என்று கருதுவார்களேயானால், அது மிகவும் பாதகமான செயல் என்று சொல்வேன்; அவ்வாறு கருதுவது மக்களாட்சி முறைக்கே ஆபத்து விளைவிக்கக்கூடும்.

SRI K. T. KOSALRAM: நான் சொன்ன கருத்தை, கனம் அங்கத்தினர் நான் சொன்னதற்கு முரணாகத் தெரிவிக்கிறார். பொதுமக்களுடைய விருப்பத்தை பொதுமக்கள் நினைக்கிற காரியத்தை, அதிகாரிகளிடம் சொல்லுவதற்குப் பொது மக்களுக்கும் பொதுமக்களின் பிரதிநிதிகளுக்கும் உரிமை உண்டு என்றுதான் நான் அன்று சொன்னேன்.

SRI V. V. RAMASWAMI: ஆனால், நான் குறிப்பிட்ட கருத்து, கனம் அங்கத்தினரின் பேச்சிலிருந்து ஏற்படுமானால், அது மக்களாட்சி முறைக்கே ஆபத்து விளைவிக்கக்கூடியது என்று தான் நான் சொல்ல விரும்புகிறேன். யாரும் தனக்குத் தெரிந்த வற்றைச் சம்பந்தப்பட்ட இடத்தில், பொறுப்புள்ள இடத்தில், நேர்மையாகவும் உறுதியாகவும் எடுத்துச் சொல்லலாம். இப்போது சுமார் ஐந்து ஆண்டுகளாக ஐ.ஏ.எஸ். பிரிவிலும், ஐ.பி.எஸ். பிரிவிலும் நல்ல வாலிபர்கள் சேர்க்கப்பட்டு வருகிறார் கள். அவர்களிடத்தில் நல்ல ஆர்வமும் திடமும் உண்மையான நாட்டுப்பற்றும் இருப்பதைக் காணலாம். அவர்களுக்குத் தங்களுடைய பல்வேறு மாவட்டங்களில் ஏற்படும் அனுபவத் தைக் கொண்டு, சிறந்த பணியாளர்களாக அவர்கள் விளங்கு வார்கள் என்றே எதிர்பார்க்கலாம். அவர்களை ஊக்குவித்து விருப்பு வெறுப்பு இல்லாமல், எந்த விதமான கட்சி மனப்பான் மைக்கும் இடம் கொடுக்காமல் சட்ட திட்டங்களுக்கும் உட் பட்டு நடக்கும்படி ஊக்குவிக்கும் முறையில் நடந்து வந்தால், அதுவே பொதுமக்களுக்கு நல்ல பாதுகாப்பு என்று கருது கிறேன்.

ஊர் காவல் (போலீஸ்) துறையிலும் நல்ல திறமையானவர் கள் இருந்து செயல்பட்டு வருவதால், மக்களிடத்தில் நல்லெண் ணமும் நம்பிக்கையும் வளர்ந்து வருகின்றன. சென்னை நகரில் போக்குவரத்திற்கு இருந்த சங்கடங்களைச் செம்மைப்படுத்து வதற்குப் போலீஸ் அதிகாரிகள் நல்ல திட்டங்களை வகுத்துச் சொல்லிவந்திருக்கிறார்கள். சென்னை நகரில் ஊர் காவல் முதல்வர் (போலீஸ் கமிஷனர்) இதற்கான ஒரு மாபெரும் திட்டத்தை—மாஸ்டர் ப்ளானை—தயாரித்திருக்கிறார்கள். போக்குவரத்துத் துறையில் பணியாற்றும் பல போலீஸ் அதிகாரி கள் சென்னை நகர் எங்கும் நெருக்கடியான நேரத்தில் சுற்றிவந்து செம்மைப்படுத்துகிறார்கள். குற்றங்கள் குறைந்துள்ளன. குற்ற வாளிகளைக் கண்டுபிடிப்பதிலும் குற்றங்கள் நடவாமல் தடுப்ப திலும் போலீஸ் அதிகாரிகள் கவனம் செலுத்திவருகிறார்கள். பருத்தி சூதாட்டமும் அறவே ஒழிக்கப்பட்டுள்ளது. கள்ளச் சாராயம் காய்ச்சுதலும் தவிர்க்கப்பட்டிருக்கிறது. சென்னை நகரிலும் இந்த மாநிலம் முழுவதும் போலீஸ் அதிகாரிகளும் ஊர் காவலர்களும் திறமையான ஆர்வத்துடன் வேலை செய்து வருகின்றனர்.. போலீஸ் அதிகாரிகளுக்கும் பொதுமக்களுக்கும் உள்ள தொடர்பும் உறவும் நாளுக்குநாள் நல்லவண்ணம் வளர்ந்து வருகிறது. இவையெல்லாம் பாராட்டுக்குரியன. இந்த நேரத்தில் ஒரு யோசனையை எடுத்துச் சொல்ல விரும்பு கிறேன். எழும்பூர் இரயில் நிலையத்திலும், சென்ட்ரல் இரயில் நிலையத்திலும் இரயில் வண்டிகள் வரும் நேரங்களில் வாகன வசதிகளைச் செய்து கொடுப்பது போலீசாரின் பணியாகும். மோட்டார் முதலிய வண்டிகளை ஒழுங்காக வரிசையாக நிறுத்தி முதலில் வந்தவர்களை முதல் வண்டியிலேயே ஏறிப் போகும்படி செய்தல் வேண்டும். வெளியில் வந்த பிறகு சிறுவர்கள் வந்து "டாக்சி வேண்டுமா? டாக்சி வேண்டுமா? எங்கே போக

22nd March 1960] [Sri V. V. Ramaswami]

வேண்டும் ?" என்று கேட்டு, அண்மையிலுள்ள இடங்களுக்குப் போக வேண்டும் என்று சொன்னால், போய்விடுவது போன்ற தொல்லை இல்லாமல் செய்யவேண்டும்.

நம் மாநிலத்தில் உணவு உற்பத்திப் பெருக்கத்தில் எதிர் பார்த்த அளவு கிடைக்கவில்லை. காரணம், தேவைப்பட்ட அளவில் செயற்கை உரம் கிடைக்கவில்லை என்று சொல்லப்பட் டிருக்கிறது. இந்த ரசாயன உரங்களை உபயோகிக்க முற்பட்ட திலிருந்து, பரம்பரையாக நம் விவசாயிகள் தங்கள் தேவை அளவுக்கு உற்பத்தி செய்துவந்த மாட்டுக் கொட்டம் கழிவு உரத்தையும், பசுந்தழை உரத்தையும் நகரக் கழிவுக் கலப்பு உரத்தையும், பேணிப் பெருக்க வேண்டுமென்ற கவலையும் அக் கறையும் நாளாவட்டத்தில் குறைந்து எந்தப் பயிருக்கும் செடிக் கும் ரசாயன உரம் போடும் பழக்கம் வந்துவிட்டதனால்தான் இந்த அவல நிலை ஏற்பட்டது என்று அஞ்சுகிறேன். உணவுப் பொருள் பெருக்கத்தைத் தலையாய கடமையாகக் கவனித்து, தன் கையே தனக்கு உதவி என்ற நியதிப்படி, வெளியிலிருந்து வரும் பொருள்களையும் கருவிகளையும் எதிர்பார்த்து, அந்தப் பழக்கத் துக்கு அடிமையாகிவிடாமல், 1962 வரையும் காத்திராமல் இயற்கை உரமும், வீட்டு உரமும், ஊர்க் குப்பை உரமும் சேமிக்கப்பட வேண்டுமென்பதில் எல்லா உதவிகளும் ஊக்கமும் அளிக்கப்படவேண்டும். இக்குப்பைகள் மிச்சப்படும் இடங் களிலிருந்து தேவைப்படும் இடங்களுக்குக் கொண்டுபோக வேண்டிய வாகனச் செலவுக்குச் சலுகை கொடுத்து எங்கும் பரவும்படி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இனி, தொழில் வளர்ச்சியைப்பற்றிச் சற்று விரிவாக ஆராய வேண்டுமென்று விரும்புகிறேன். இது சம்பந்தமாகச் சில வற்றைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டியிருப்பதால், ஆங்கிலத் தில பேச ஆரம்பிக்கிறேன். மன்றத்தினர் என்னைப் பொறுத் தருள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

Mr. Deputy Chairman, Sir, I now switch over from Tamil to English, as I wish to lay stress with all the emphasis at my command on the very important subjects which exercise the minds of all in our State. In the matter of planned and speedy economic development of our State, there can be no two opinions. Naturally agriculture takes the pride of place, and in the matter of agricultural production, we have made very tremendous headway. All major rivers have been harnessed to the full and as many dams as are feasible have been constructed with a view to securing sufficient quantity of water for irrigation as well as for generation of electricity. In this regard, our engineers, particularly our Chief Engineer for Public Works (General) and our Chief Engineer for Electricity have played a very notable part. It is praiseworthy that, with zeal and drive, they not only formulated plans for this purpose but also exerted their best assisted by their able officers for the speedy execution of these projects and the maximum utilisation of our resources. We have almost come to the end of our resources. For further development in this direction, both in

the matter of water for irrigation and generation of electricity, we have now to look to our neighbours, the Andhra Pradesh and Kerala in particular. It is hoped that our neighbours will spare us the surplus water. It is in this connection that the Centre has to play its part fairly and squarely by all the States concerned in the interest of common good. But the feeling gains ground that all that need be done is not being done. It is hoped that our Ministers will urge upon the Government of India the imperative necessity to take not only firm but also speedy action in this matter.

In the matter of industrial development, we are no doubt happy that much headway has been made. It is not my desire to enter into the controversy as to whether the North has forged ahead or whether the South has been let down badly in this matter. But it cannot be gainsaid that there is such a feeling that while concentrated attention is paid to the development in the northern part of the country, much attention is not paid to the industrial development of the Southern States. The best answer to this, in my opinion, will be not repetition of the platitude that as much attention is paid to the South as to the North, but concrete action in proof of this.

In this connection, I wish to state that unless and until the Government of India pay heed and take tangible steps, fissiparous tendencies may gain momentum and strength. In this connection, I first wish to pay my tribute to our energetic, enthusiastic, and resourceful Minister for Industries. Since he took up the portfolio of Industries, this State has forged ahead in many directions. With his wide knowledge, vast experience, and ability, he works round the clock with a view to securing for this State a prominent place in the industrial map of India. We are grateful to him for the very many efforts he takes in this direction and the perseverance with which he follows up formulated plans for industrial development. In this connection, I first wish to refer to the aluminium plant to be established at Salem. Sir, since 1955, I have raised this question time and again in this House. At first, it was stated that the aluminium plant at Salem would be in the public sector. But gradually this is relegated to the background. I learn that the Indian Geological Survey Department found that the bauxite available at Salem is good. This discovery seems to have startled some vested interests. Later, another expert from another department, I fear without the knowledge of the State Government, was sent down to the South. This expert, it appears, has raised some doubts about the quality of the bauxite. In this way, the realisation of the establishment of an aluminium plant at Salem has been delayed; but our redoubtable Minister for Industries is determined to realise this cherished dream and has risen to the occasion. On his way from the United Nations Organization, he went to Italy and invited a reputed Italian expert to come here and examine. He has also arranged for the collaboration of the Italian firm with an industrialist in this State so that the aluminium plant may be started at

22nd March 1960] [Sri V. V. Ramaswami]

least in the private sector inasmuch as the Government of India are not prepared to undertake this venture in the public sector, and our State Government have not the necessary financial resources to finance this industry. It is indeed commendable that a private individual has been persuaded to take up this venture. Everyone must welcome this. Our thanks are due to the energetic and resourceful efforts taken by our Industries Minister. Thus, the stage is well set for the establishment of an aluminium plant at Salem. But at this juncture, one is distressed to note that another spoke is being put in the wheel. Our State Government are prepared to supply electric energy at a fair rate. But it seems that as comparatively the cost price of aluminium in a factory in the North will be high as the factory in the North is not able to obtain electric energy at such a fair rate, it appears that vested interest seeks to sabotage the realisation of the establishment of an aluminium plant in the South. One is distressed to learn that the Planning Commission now stand in the way in spite of the very forceful plea supported by justifiable reasons advanced by our Ministry. Sir, I cannot but observe that this Planning Commission, who have no constitutional basis, seek to become a super-Cabinet. But for our illustrious Prime Minister, the Planning Commission can only be an advisory body. But now they seem to control and dominate the development plans and programmes. It is sad to note that every Ministry in the States bewails that the Planning Commission do not or may not agree. Thus, the Commission have become an obstacle to the aspirations of the South and the people of our State in particular. If this intolerable situation does not respond to the clinical treatment, I am afraid, it may lead to some major surgical operations. I can only urge upon our State Government to impress on the Government of India the gravity of the situation in this matter. They must with one voice, with all the force and firmness at their command, tell the Government of India that any impediment in the establishment of an aluminium plant at Salem, which has been declared to be a feasibility, will be considered to be an act of partiality on the part of the Centre. The Centre must be told that they must not yield to the pressure of vested interests in the North. The Centre must also be apprised that vested interests in the North seek to torpedo the legitimate venture in the South. If this is not done, I am afraid, the charge of preferential treatment to the detriment of the South will be considered well-founded. The State Government must tell the Government of India that their position will be indefensible. They must also realise that the demand for a separate State or for complete autonomy will gain force. It is hoped that the firmness on the part of our Ministry and the wisdom on he part of the Government of India will pave the way for the establishment of an aluminium plant without any further delay. All that I have stated in regard to the aluminium plant applies with equal force, if not more force, to the establishment of a steel plant in our State. Sir, when the Neyveli Lignite Project was first sanctioned, the whole of Tamil Nad became jubilant and hoped that the face of the State will be changed, and the people expected that this

[Sri V. V. Ramaswami] [22nd March 1960

would pave the way for rapid industrialisation. But the progress made in the actual execution caused some anxiety and suspicion. I know that, in spite of various objections and obstacles raised by the Planning Commission and some Departments of the Government of India, our engineers, alert and vigilan as ever, forced the pace of the execution of the project. So, the work is in progress, and mining of 35 lakh tons of lignite per annum is promised in the current plan with considerable increase in the next plan period.

5 p.m.

As regards the iron and steel industry, Sir, it is a fact that our State is in dire need of one. Our requirements of iron and steel, both in the public and private sectors, are woefully in short supply. Cement, we produce to meet our entire demand; but as for steel, we look to the North. So, it is imperative and urgent that a Steel Plant must be established in our State. Sir, a number of questions have been asked in this House as well as in the other House to elicit information and urge upon the Government to spare no pains to start a Steel Plant in Salem. The plea of availability of coal near the source of raw material can no longer be advanced, since Neiveli has come up with production of lignite. As for the quality of iron ores available, attempts have been made by interested parties to influence the Planning Commission on the ground that the quality is not of the standard. Here again, our Industries Minister has persevered with zeal and determination. It is a matter of satisfaction that he has been able to bring a team of East German Experts by a personal visit to East Germany. The Chief Representative of the Team has said that the magnesite ore estimated at 500 million tons in Salem District can produce the finest pig iron in the world, as good as the Swedish charcoal pig iron, reputed to be the best in the world. He has also blessed us that these ores are God-send to our country. These ores are not only widespread, but their sulphur and phosphorus contents are very low. While this is so, it is a matter for disappointment and distress that some vested interests in New Delhi try to put in fresh obstacles so as to retard the wheel of progress. I am confident that our Government will not rest on their oars, but steadfastly pursue the matter, so that a Steel Plant may soon be established at Salem. I know that our Minister for Industries will do all that lies in his power. I assure him that this House and the other House as well as the people of the State are solidly behind him in this matter.

Sir, in the mater of small industries, it is common knowledge that our State has made much progress. Industrial Estates have been established. It is our fervent hope that in the matter of major industries, the same determination may be shown. Sir, our Minister for Finance has admitted in his speech, " There can be no doubt that our industrial development is far from adequate ". I know that our Minister for Finance and our Minister for Industries work in complete co-operation and have set their hearts on the rapid industrialisation of our State. I have no doubt that they,

22nd March 1960] [Sri V. V. Ramaswami]

under the able stewardship of our Chief Minister, will see that the establishment of a Steel Plant and an aluminium plant at Salem become a reality within the Third Plan period.

Sir, as regards the generation of energy, as I have already stated, we have reached the limit of our resources. We have, therefore, to concentrate on Thermal Stations. In this connection, I am glad that my amiable Friend, the Minister or Electricity, has told us that the only solution is the establishment of an Atomic Energy Plant. I know that he is keen and will do his best. But, I find that there is no tangible progress made in this matter. It is hoped that he will bend all his energy and efforts in this direction and see that the atomic plant is located in our State.

Sir, time and again, I have urged the necessity for the development of the Tuticorin Port and the implementation of the Sethusamudram Project. A great statesman, administrator and industrialist of our State, Dr. A. Ramaswamy Mudaliyar headed a committee which has recommended, after a thorough investigation, that these two schemes are not only feasible but are also within the financial resources and are a necessity. But now, Sir, it looks as though both the schemes will be shelved and put into cold storage. The plea is lack of finance. It is said that as regards the Sethusamudram Project, the original estimate of Rs. 10 crores was low and that this scheme would cost Rs. 30 crores, but nobody bothers to give any reasons for this increase of amount to Rs. 30 crores or to point out how the original amount of Rs. 10 crores is not correct. Some plea is put forward and the scheme is sought to be shelved. This is unfortunate. One fails to understand how the Kandla Port in Sourashtra is an urgent one. It is not clear whether that is a natural port and whether it does not require continuous dredging operations. Is there sufficient drinking water available? Is there any railway line in the area? One cannot help feeling that while these things in the North are taken up, the few schemes in the South are sought to be dropped on the ground of lack of finance. A similar fate is meted out to the new railway lines to be laid in the South as also the rail-road bridge between the mainland at Mandapam and Pamban in Rameswaram Island. I moved a Resolution in this House for a new railway line, but the Railway Minister has now said, " No more new lines ".

Sir, the schemes mentioned by me are few in number; but their implementation is beset with delays and difficulties under some pretext or other. We have natural resources and talent. Our Ministers are keen on the rapid industrialisation of the South, but the Centre seems to be reluctant to provide the capital. I hope and trust that the Government of India will soon realise their responsibilities to all States and do the right thing yy our State as well Our Ministers must not hesitate to impress upon the Government of India that these are our minimum and that they cannot be shelved on account of the interference of some vested interests or other, as otherwise the stand taken by certain political parties will be fully justified.

[Sri V. V. Ramaswami] [22nd March 1960

Before I conclude my speech, let me thank you, Mr. Deputy Chairman, for having given me such a long time to deliver my speech here. Also, may I take this opportunity to express my gratitude to our revered Chairman for the kindness that he has shown me and for the keen and personal care that he has taken about my health? I also owe a deep debt of gratitude to all the Members of the House who have treated me with utmost kindness and have accommodated me in everything. I am grateful to all the Ministers in general. The Hon. the Leader of the House has always been very accommodative so far as I am concerned. In the matter of allotment of time, dates, etc., for the various Members, and to our various other requests, the Hon. the Leader of the House has been very accommodative.

Sir, I must express my pride in having been a Member of this House for such long years under the leadership of my esteemed Friend Dr. A. Lakshmanaswami Mudaliar, the revered Leader of the Opposition. Dr. Mudaliar is an institution by himself and I must say that the Madras University gets all the prestige, credit and honour because of his occupying the seat of Vice-Chancellorship of that University. It is the Madras University that will stand to lose if, for any reason, he prefers to sever his connection with it.

Lastly, let me express my gratitude to our Secretary and the staff for all the help that they have given me. Particularly, the Secretary has been very helpful to me. He was very careful that the rules should be followed and that nobody should go beyond the rules. Whenever I was in need of any material or any record, he helped me to get it from the Library and the Office and enabled me to get at true facts. I must also say, in this connection, that the Staff and the Reporters have been very kind to me and let me express my gratitude to them also. In all humility, I take leave of all of you. Once again, I thank you, Mr. Deputy Chairman, for the consideration that you have shown me by allowing me to talk for such a long time.

* SRI A. SUBRAMANYAM: கனம் உதவித் தலைவர் அவர்களே, 1960–61-ம் வருஷத்திய வரவு-செலவுத் திட்டத்தை நான் முழு மனதுடன் ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். முதலில், சிறந்த முறையில் இந்த வரவு செலவுத் திட்டத்தைத் தயாரித்த கனம் நிதியமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். இந்த வரவு-செலவுத் திட்டத்தைச் சென்னை இராச்சியத்திலுள்ள எல்லோருமே நன்கு போற்றி வரவேற்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. இந்த வரவு-செலவுத் திட்டத்தினால் இந்த இராச்சியத்திற்கே ஒரு தனிப் பெருமை ஏற்பட்டிருக்கிறது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன்.

தற்போது அரசாங்கம் அழுகும் பொருள்களுக்கு வரி விலக்கு அளித்திருக்கிறது. இது ரொம்பவும் வரவேற்கத்தக்க விஷய மாகும். இந்த விஷயத்திலே அரசாங்கத்தை எல்லோரும் பாராட்டாமல் இருக்க முடியாது. ஏனெனில், இது எல்லா

22nd March 1960] [Sri A. Subramanyam]

ஜனங்களுக்கும் மிக மிக அத்தியாவசியமான பொருளாக இருந்து வந்திருக்கிறது என்பதை நாம் மறந்துவிட முடியாது. இந்த வரியிலிருந்து விலக்குக் கொடுத்திருப்பதைப் பற்றி ஒரு சில கட்சிக்காரர்கள் பேசும்போது, "தங்களால்தான் இந்த வரி எடுக்கப்பட்டிருக்கிறது" என்று கூறியிருக்கிறார்கள். அவர்களுடைய கிளர்ச்சியினால் இந்த வரி எடுக்கப்படவில்லை என்பது சென்ற வருஷத்திலே இந்த வரியைப்பற்றி அரசாங்கம் கூறியதைப் பார்த்தால் தெரிய வரும். இதை நன்றாகப் பரிசீலனை செய்து அடுத்த வருஷத்தில் நீக்க வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. அப்படி இருக்கும்போது, "இது எங்களுடைய கிளர்ச்சியினால்தான் நீக்கப்பட்டது" என்று சொன்னால், அது அவ்வளவு பொருத்தமாக இருக்க முடியாது என்பதுதான் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். 5-10 p.m.

இன்னொரு முக்கியமான விஷயத்தையும் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். பால் மணம் மாறாத குழந்தைகளுக்கும், விருப்தாப்பிரியர்களுக்கும் குடிப்பதும் பால் என்பதை யாரும் மறந்துவிட முடியாது. குறிப்பாக வியாதியஸ்தர்களுக்குப் பால் மிகவும் அவசியம் என்பதையும் நாம் தெரிந்துக் கொண்டிருக்கிறோம். பாலுக்கு விற்பனை வரி நீக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அதோடுகூட, இன்னொரு முக்கியமான விஷயத்தையும் நான் கூற விரும்புகிறேன். அதாவது பிற்பட்ட இனத்தார்கள், ஹரிஜனங்கள் சம்பந்தப்பட்ட விஷயத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். தற்போதைய ஆட்சியிலே இந்திய யூனியன் சட்டத்திலே ஹரிஜனங்களுக்கும் பிற்பட்ட இனத்தவர்களுக்கும் சில சலுகைகள் வழங்கப்பட்டிருக்கின்றன. குறிப்பாக, பிற்பட்ட இனத்தவர்களை "வீக்கர் ஸெக்ஷன்ஸ்" என்பதாகக் குறிப்பிட்டு, சில சலுகைகள்—கல்வியிலும் பொருளாதாரத்திலும் குறைந்தவர்களாக இருப்பவர்களுக்கு—வழங்க வேண்டுமென்ற ரீதியிலே சில சட்ட திட்டங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், அவைகள் சரியான முறையில், சரியான சந்தர்ப்பத்தில், சரியானபடி நடைமுறையில் கொண்டுவரப்பட்டதாகக் காணோம். சமீபத்திலே ஹரிஜனங்களுக்கு இரயில்வேக்களிலோ இன்னும் பல இடங்களிலோ உயர்வான ஸ்தானங்கள் வழங்கப்பட வேண்டும் என்று குறிப்பிட்டு, சில இலாக்காக்களில் அவர்களுக்கு உயர்ந்த பதவிகள் அளிக்க வேண்டுமென்று உத்தரவிட்டிருப்பார்களானால் சிலர் ஆட்சேபித்து கோர்ட்டுக்குச் சென்றால், "அம்மாதிரித் தனிப்பட்ட முறையில் ஒரு சமூகத்திற்கு உத்தியோகம் வழங்கக்கூடாது" என்பதாகச் சட்டத்தில் கூறப்பட்டிருப்பதாகத் தெரிவித்து அதை நிராகரித்து விடுகிறார்கள். ஆகையால் அத்தகைய குறைகள் இனி நிகழாதவாறு அரசியல் சட்டத்தைத் திருத்தி மாற்றியமைக்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் காந்தியடிகளுடைய எண்ணம் நிறைவேற்றப்படுவதாக ஆகும். காங்கிரஸ் சர்க்காரும் நியாயம் வழங்கினதாகக் கருத முடியும் என்பதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் நான் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

[Sri A. Subramanyam] [22nd March 1960

இப்படியே சலுகை அளித்துக்கொண்டு வருவோமானுல், இது நீண்ட நாட்களுக்கு இப்படியே போகுமோ என்று சிலர் நினைக்கலாம். குறிப்பிட்ட அளவில் குறிப்பிட்ட ஆண்டுகள் வரையில், இப்படிச் செய்தால் போதும். அவர்கள் தக்க ரீதியில் உயர்வடையும் வரையில் இருந்தால்கூட போதும். இதை அவசியம் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஜாதிகளெல்லாம் ஒழியவேண்டும் என்று கூறும் இந்தக் காலத்தில் பிற்பட்ட இனத்தவர்கள் என்று பல இனத்தார்கள் கூறிக்கொண்டு இன்னும் ஜாதிகள் வளரும்படியான ரீதியில் பேசிக் கொண்டும், எழுத்து மூலமாகச் சட்டங்களைச் செய்து கொண்டும் இருந்தால், அது நாட்டுக்குப் பிரயோஜனப்படுமா என்று சிலர் நினைக்கிறார்கள். அப்படி நினைக்கவேண்டிய அவசியமே இல்லை. பிற்பட்ட இனத்தவர் என்றால், கல்வியிலும், பொருளாதாரத்திலும், அரசாங்க உத்தியோகங்களிலும் பின்னடைந்திருக்கக் கூடியவர்கள் சரியானபடி உத்தியோகங்கள் பெற முடியாதவர்கள் என்றுதான் கொள்ளவேண்டும். ஒரு குறிப்பட்டவர்கள்தான்—முற்போக்காளர்கள்—சரியான நிலைமையில் படிக்க சந்தர்ப்பமும் சமயமும் ஏற்படுகிறது. ஐ.ஸி.எஸ். அதிகாரியோ இன்னொரு பெரிய இன்ஜினியரோ இருந்தால், அவர்களுக்குத் தகுந்த கூடுதலான ஊதியம் கிடைக்கின்றது. அதனால் தகுந்த முறையில் அவர்களுடைய பிள்ளைகளை நல்ல மேல் படிப்புக்கு அனுப்ப வசதி ஏற்படுகிறது. ஆனால், ஏழைகளுடைய பிள்ளைகளுக்கு அப்படிப் பெரிய படிப்போ, உயர்வான படிப்போ கொடுப்பதற்கு வசதி கிடையாது. தங்கள் பிள்ளைகளுக்கு நல்ல உணவு, ஆடை கொடுக்க முடியாத ஏழைகளாக இருக்கும்போது, படிப்பு விஷயத்தில் எப்படி அக்கறை செலுத்த முடியும்? ஆகையால், அவர்களுக்குப் பொருளாதாரத்தில் அக்கறை ஏற்படுவதற்கும், கல்வி விஷயத்தில் அதிகமாகப் படிப்பதற்கும் அரசாங்கம் ஹக்கமும் ஆதரவும் கொடுக்க வேண்டும். அதற்குத் தக்க ரீதியில் பல சட்ட திட்டங்களைச் செய்துதான் தீர வேண்டும் என்று அரசாங்கத்தை நான் கேட்டுக்கொள்கின்றேன்.

மேலும், தற்போது, அரசாங்கத்திலே உத்தியோகம் வழங்கும்படியான ஒரு முறை அமுலில் இருந்துவருகிறது. உத்தியோகங்கள் வழங்கும்போது, 25 ஸ்தானங்கள் காலி ஏற்படுமானால், அதிலே 6 ஸ்தானங்கள் பிற்பட்ட இனத்தவர்களுக்கும், 4 ஸ்தானங்கள் ஹரிஜனங்களுக்கும், 15 ஸ்தானங்கள் முற்பட்ட இனத்தவர்களுக்கும் கொடுக்கும்படியான ஒரு நிலைமை உண்டுபண்ணி அரசாங்கம் திட்டம் வகுத்திருக்கிறது. ஆனால், ஒரு சௌகரியம் அதிலே செய்யப்பட்டிருக்கிறது. பொதுப்படையாக, முற்பட்ட இனத்தவர்களுக்காக ஒதுக்கிய 15 ஸ்தானங்களிலும் ஹரிஜனங்களும் பிற்பட்ட இனத்தவர்களும் போட்டியிடலாம், போட்டியிட்டு வெற்றியடையலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஹரிஜனங்கள், பிற்பட்ட மக்கள் ஆகிய இவர்கள் எப்படி முற்பட்ட இனத்தவர்களோடு போட்டியிட முடியும்? தினத்திற்கு ஐந்து வேளை

22nd March 1960] [Sri A. Subramanyam]

சாப்பிட்ட ஒருவனையும் இரண்டு நாட்கள் பட்டினியாகக் கிடக்கிற ஒருவனையும் சேர்த்து இரண்டு பேர்களையும் ஓடவைத்து எவன் முன்னால் வருகிறான் என்று பார்த்தால், அது சரியாகாது. அது போன்றுதான் முற்பட்ட இனத்தவர்களுடன் பிற்பட்ட இனத்தவர்களைச் சேர்த்துப் போட்டிபோடச் செய்வது. ஆகவே இதை அரசாங்கம் யோசித்துப் பார்க்கவேண்டும். ஆகையால், இவைகளை மாற்றித் திருத்தி அமைக்க வேண்டும். இந்த முறையில்கூட பிற்பட்ட இனத்தவர்கள் சில பேர் வெற்றியடையலாம். முற்பட்ட இனத்தவர்களோடு போட்டியிட்டும் இரண்டு மூன்று ஹரிஜனங்கள் வெற்றி அடையலாம். நான் இல்லையென்று சொல்லவில்லை. அது மட்டும் போதாது. குறிப்பாக, 15 ஸ்தானங்கள் வழங்கக்கூடிய இடத்தில், அதிகமாக ஸ்தானங்கள் பிற்பட்ட இனத்தவர்களுக்கு வழங்க வேண்டும். முற்பட்ட இனத்தவர்களுக்காக ஒதுக்கப்பட்ட ஸ்தானங்களில் இரண்டுக்குக் காலி ஏற்பட்டால், 200 அல்லது 300 விண்ணப்பங்கள் வருகின்றன. சர்வீஸ் கமிஷனுக்கு அரசாங்கம் எழுதிக் கேட்டால், விவரம் தெரியும். ஆனால், பிற்பட்ட இனத்தவர்களுக்காக ஒதுக்கப்பட்ட ஸ்தானங்களில் இரண்டுக்குக் காலி ஏற்பட்டால், எத்தனை விண்ணப்பங்கள் வருகின்றன பாருங்கள். 2,000-க்கு மேல் விண்ணப்பங்கள் வருகின்றன. 2,000 விண்ணப்பங்கள் வருகிற அளவுக்குத் தகுந்தபடி ஸ்தானங்கள் ஒதுக்கி, அவர்களை முன்னேற்றுவதற்கான காரியங்களை அரசாங்கம் செய்ய முன்வர வேண்டும் என்பதுதான் என்னுடைய ஆசை.

THE HON. SRI C. SUBRAMANIAM: இது எதைக் குறிக்கிறதென்றால், பிற்பட்ட இனத்தவர்களும் ரொம்ப முன்னாலே வந்துகொண்டிருக்கிறார்கள் என்பதைக் குறிக்கிறது. ஜாஸ்தி படித்துவிட்டார்கள் என்றும் தெரிகிறது.

* SRI A. SUBRAMANYAM: கனம் அமைச்சர் அவர்கள் சொல்வது எப்படி இருக்கிறது என்றால், சாப்பாடு போடுகிறோம், எல்லோரும் வாருங்கள் என்று கூப்பிட்டு வந்தவர்கள் சாப்பிடும்பொழுது கழுத்தைப் பிடித்து அமுக்குவது போல் இருக்கிறது. எல்லோரும் படித்து ஆவலோடு வரும்போது, இன்னும் அதிக ஸ்தானங்கள் கொடுக்கப்பட வேண்டும். 2,000 பேர்கள் விண்ணப்பம் செய்துகொள்ளும்போது, இரண்டு பேருக்கு மட்டும் தான் வேலை என்றால், அது சரியல்ல. குறைந்தது 15 பேருக்காவது கொடுக்கப்படவேண்டும் அல்லவா? குறைந்தது இரண்டு மூன்றாவது சேர்த்துக் கொடுங்கள் என்றுதான் கேட்கின்றோம். அதுவும் நீண்ட நாட்களுக்கு வேண்டுமென்று கூறவில்லை. குறிப்பிட்ட காலத்தில், இவர்கள் முன்னேறுகிற வரையில் உத்தியோக ஸ்தானங்கள் கொடுங்கள்; கடைசியில் எல்லோரையும் போல் இவர்களும் படித்து உத்தியோகத்திற்கு வந்து முன்னேறிவிட்டால், அதன்பிறகு இவர்களுக்குச் சலுகைகள் வேண்டாம் என்றுதான் சொல்லுகிறோம். இப்பொழுது தராசின் முள் சரியாக இல்லை. அதை ஒரு நிலைக்குக் கொண்டுவரும் வரையில் இதெல்லாம் அவசியம். மற்றவர்களைப்போல் இவர்களும் படிக்க ஊக்கமும் ஆற்றலும் ஏற்படும் வகையிலே அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும்

என்றுதான் நான் கனம் அமைச்சர் அவர்களைத் தாழ்மையாக இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்ளுகின்றேன். இதனுல் ஜாதிகள் வளர்ந்துவிடும் என்பதாக யாரும் நினைத்துவிட வேண்டாம். ஜாதிகள் ஒழிய வேண்டுமென்பதற்காகத்தான் அதிலும் அதிசீக்கிரமாக ஒழிய வேண்டும் என்பதற்காகத்தான் இம்மாதிரித் திட்டங்களைக் கொண்டுவர வேண்டுமென்று விரும்புகிறேன். அதைத்தான் பகிரங்கமாக இந்த இடத்தில் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னெரு முக்கியமான விஷயத்தைப்பற்றியும் குறிப்பிட விரும்புகிறேன். சமீபத்தில் நம்முடைய எஸ்டிமேட்ஸ் கமிட்டி யானது பம்பாய், டில்லி, பஞ்சாப் முதலான இடங்களுக்குச் சென்று வந்தது. அந்தக் கமிட்டியில் அங்கத்தினர் என்ற முறை யில் நானும் சென்றிருந்தேன். அப்பொழுது பம்பாயிலே போனவுடன் அங்கு சட்டசபை அங்கத்தினர்கள் தங்கும் இடங் களையும் சாப்பிடும் இடங்களையும் போய்ப் பார்த்தால், அவை மிகவும் அழகாக, நல்ல முறையிலே இருக்கின்றன. அங்கு வந்து தங்குவதற்கும் மற்ற வசதிகள் நிறைந்ததாக இருக்கிறது. ஆனுல், சென்னைப்பட்டணத்தில் இருப்பதைப் பார்க்கும்போது, இது பள்ளிக்கூடத்தில் படிக்கும் பிள்ளைகளுக்கு ஹாஸ்டல் கட்டியிருப்பது மாதிரி இருக்கிறது. பள்ளிக்கூடப் பிள்ளைகளுக் காவது ஒரு நல்ல முறையில் ஹாஸ்டல் இருக்கும். ஆனுல், நம்முடைய ஹாஸ்டல் அந்த அளவுக்குக்கூட இல்லை. "பாத் ரூம்" வசதி இல்லை. மற்றும் இதர நல்ல வசதிகள் இல்லை. பாத் ரூமிற்கு ஒரு பர்லாங்கு நடக்கவேண்டியிருக்கிறது. படிக் கட்டு ஏறி இறங்க வேண்டும். பம்பாயில் சட்டசபை ஹாஸ்ட லுக்குத் தினமொன்றுக்கு இரண்டு ரூபாய் வாடகை வாங்கு கிறுர்கள். ஆனுல், இங்கு ரூமிற்கு இரண்டரை ரூபாய் வாங்கு கின்றோம். இரண்டு ரூபாய்க்குப் பம்பாயில் நல்ல வசதிகள் தரப்படுகின்றன. ஆனுல், நம்முடைய சென்னைப்பட்டணம் நல்ல நவநாகரீகமடைந்த நகரமாக இருந்தும், இங்கு பம்பாயைவிடக் குறைந்த வசதிகளே தரப்படுகின்றன. சென்னைப்பட்டணம் எல்லா இராச்சியங்களுக்கும் வழிகாட்டக்கூடிய நிலையிலே பல துறைகளிலும் இருந்துகொண்டிருப்பதால், இங்கும் ஹாஸ்டல் விஷயத்தை நன்கு கவனித்து, தகுந்தபடி மாற்றியமைக்க வேண்டும். இப்பொழுது இருக்கும்படியான ஹாஸ்டலுக்குப் பின் பக்கத்தில் வேண்டிய காலி இடம் இருக்கிறது. அங்கே பாத் ரூம் வசதி, மற்ற வசதிகள் எல்லாம் செய்யலாம். அங்கத் தினர்களைப் பார்க்க வருகிறவர்கள் நல்ல முறையில் வசதியாகத் தங்கக்கூடிய அளவுக்கு நாற்காலிகள் போட்டிருக்கவேண்டும். இப்படிப்பட்ட வசதிகள் மிக மிக அவசியம். அத்தகைய நிலைமை இப்பொழுது இல்லாதிருப்பது அவமானகரமாக இருக் கிறது. மற்ற இராச்சியங்களின் சட்ட சபை அங்கத்தினர் களுக்குச் செய்துகொடுத்திருக்கும் வசதியைப் பார்த்துவிட்டு இதையெல்லாம் பார்க்கும்போது, நமது குறை நன்றுகத் தெரி கிறது. ஏதோ அதிக வசதி கொடுத்தால், எதிர்க் கட்சிக் காரர்கள் குறை சொல்வார்களோ என்று அரசாங்கம் யோசிக்க வேண்டாம். தேசத்திலே மக்கள் சாப்பாட்டுக்கே ஆதார

22nd March 1960] [Sri A. Subramanyam]

மில்லாமல் இருக்கும்போது, சட்டசபை அங்கத்தினர்களுக்குக் கட்டிடமா, பெரிய பெரிய மெத்தைகளா, வசதிகளா, என்று சிலர் பேசுவார்கள் என்பதாகப் பலர் நினைக்கலாம். அவ்வாறு நினைக்க வேண்டிய அவசியமில்லை. எதிர்க் கட்சியில் உள்ளவர்களும் எங்களுடன் வந்தவர்கள் அங்கெல்லாம் அவைகளைப் பார்த்துவிட்டு, "சென்னையில் இருக்கும் ஹாஸ்டலைப் பாருங்கள். எவ்வளவு குறைகள் நிறைந்ததாக இருக்கிறது" என்று அவர்கள் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். அவர்களும் சட்டசபை அங்கத்தினர்களுக்கு அதிக வசதியான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறார்கள். ஆகையால், நிதி அமைச்சர் அவர்கள் இதைக் குறித்து உடனே ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

அடுத்தபடியாக, அங்கத்தினர்களின் சம்பள (படிச்செலவு) விகிதம்பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். பக்கத்திலுள்ள மைசூர் இராச்சியத்தில் சட்டசபை அங்கத்தினர்களுக்கு ரூ. 200, ரூ. 250 இப்படிக் கொடுக்கிறார்கள். அங்கத்தினர்களுடைய சௌகரியத்திற்கு ஏற்படுகின்ற செலவிற்காகக் கொடுக்கிறார்கள். மைசூரில் வாழ்க்கைச் செலவு குறைவு. அப்படியிருந்தும் கூட, அங்கே அங்கத்தினர்கள் அதிகமாகச் சம்பளம் வாங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஹாஸ்டலும் நல்ல முறையில் கட்டப்பட்டிருக்கிறது. சென்னை இராச்சியத்தில் வாழ்க்கைச் செலவு அதைவிட உயர்ந்திருக்கிறது. அங்கத்தினர்களுக்குப் பலவிதமான செலவுகள் ஏற்படுகின்றன. அங்கத்தினர்களுடைய சாப்பாட்டிற்கும், போக்குவரத்திற்கும் மற்றபடி ஆகக்கூடிய செலவிற்கும் இப்பொழுது கொடுக்கும்படியான ரூபாய் 150 போதுமானதாக இல்லை. ஆகையினாலே, நிதி அமைச்சர் அவர்கள் இதைக் கவனித்து அடுத்த பட்ஜெட்டிலாவது அல்லது அதற்கு முன்பாகவே அங்கத்தினர்களுடைய (படிச்செலவு) சம்பளத்தை ரூ. 150-லிருந்து 250 ரூபாய்க்கு உயர்த்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அங்கத்தினர்களுக்குச் சம்பளம் என்பது கிடையாது. அதையும் ஒரு படியாகத்தான் ஏற்படுத்தியிருக்கிறார்கள். தினம் ஒன்றுக்கு 25 ரூபாய் படிச்செலவு என்று குறிப்பிட்டு அந்த 25 ரூபாயில் 12-1/2 ரூபாயைப் படியாக வைத்து மீதித் தொகையில் 150 ரூபாய் சம்பளமாக எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். சட்டசபை அங்கத்தினர்கள் சம்பளம் வாங்கக் கூடியவர்கள் அல்ல. அவர்கள் சம்பளம் வாங்கினால், தேர்தலுக்கு நிற்க முடியாது. நாம் வாங்குவது சம்பளம் அல்ல. படியாகத்தான் கொடுக்கப்படுகிறது. மற்ற வசதிகளைச் செய்து கொள்ளுவதற்கு ஆகும் செலவிற்காகக் கொடுக்கப்படுகிறது. பணம் இல்லை என்ற காரணத்தினால், இதை ஒதுக்கிவிடாமல், இம்மாதிரி அங்கத்தினர்களின் படிச்செலவை உயர்த்த வேண்டியது மிக அவசியம் என்பதை வற்புறுத்திச் சொல்லிக் கொள்ளுகிறேன். 5–20 p.m.

அடுத்தாற்போல், உபாத்தியாயர்கள் விஷயம்பற்றி நிதி அமைச்சர் அவர்களுக்குத் தெரியாதது அல்ல. அந்த இலாகாவை நிர்வகிக்கக் கூடிய அவருக்கு அதில் இருக்கக்கூடிய கஷ்ட

[Sri A. Subramanyam] [22nd March 1960

நஷ்டம் நன்றாகத் தெரியும். வாத்தியார்கள் விஷயத்திலே இன்னும் கொஞ்சம் அக்கறை செலுத்துவது மிகவும் அவசியம் என்பதை நான் இங்கே ஞாபகப்படுத்த விரும்புகிறேன். வாத்தியாராக இருக்கக்கூடியவர்கள் கஷ்டப்பட்டு அறிவு வளர்ச்சிக்கு நமக்குப் பயிற்சி கொடுத்ததினால்தான் இப்பொழுது சட்ட சபை மெம்பர்களாகவும், உதவி சபாநாயகராகவும், சபாநாயகராகவும், பிரதம மந்திரியாகவும், முதல் அமைச்சராகவும், மந்திரிகளாகவும் ஜனாதிபதியாகவும் வந்திருக்கிறோம். அப்படி வாத்தியாராக இருந்து கற்றுக்கொடுத்தவர்கள் எப்பொழுதுமே வாத்தியார், வாத்தியார் என்று அப்படியே இருந்துகொண்டிருக்கிறார்கள், ஏணியைப்போல். அந்த முறை இல்லாதபடிக்கு, அவர்கள் கற்றுக்கொடுத்துதான் நாம் பெரிய உத்தியோகஸ்தர்களாக வந்திருக்கின்றோம் என்பதை நினைத்து, வாத்தியார்களுடைய விஷயங்களை மறக்காமல் கவனித்து ஏதாகிலும் கொஞ்சம் அவர்களுடைய வருமானத்தை உயர்த்த ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வரியை நீங்கள் போடுங்கள். வரியை ஆட்சேபிக்கவில்லை. வரியைப் போட்டால் கூச்சல் போடுகிறார்களே என்று நினைப்பது தவறு. திராவிட முன்னேற்றக் கட்சியினர் வரியைப் போடுகிறார்களே என்று சொன்னார்கள். இப்பொழுது சென்னைக் கார்ப்பரேஷனில் அவர்கள் வரியைத்தான் போடுகிறார்களே தவிர வேறு ஒன்றுமில்லை. எந்தக் கட்சியினராக இருந்தாலும், வரி போடாமல் எதையும் செய்ய முடியாது. ஆகையினால், நியாயமான வரிகளை அரசாங்கம் போடத்தான் வேண்டும். அரசாங்கமும் வரி வருவாய் இல்லாமல், எதையும் செய்ய முடியாது. எந்த விதத்தில் வருவாய் வருவதற்கு வரியை உயர்த்தவேண்டுமோ அந்த விதத்தில் நீங்கள் உயர்த்துங்கள், எந்த இடத்தில் வரியைக் குறைக்க வேண்டுமோ அந்த இடத்தில் குறையுங்கள், எந்த இடத்தில் செலவை அதிகமாகச் செய்யவேண்டுமோ அதைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன். எனக்குப் பேசுவதற்குச் சந்தர்ப்பம் கொடுத்ததற்காக உப-தலைவர் அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*VIDWAN T. MUTHUKANNAPPAN: கனம் துணைத் தலைவர் அவர்களே, இந்த நிதி நிலை அறிக்கையை மனப்பூர்வமாக ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச முற்படுகிறேன். இந்த ஆண்டு இந்த நிதி நிலை பற்றிய அறிக்கைகளெல்லாம் வந்திருக்கிற முறை பெரிதும் பாராட்டக்கூடியதாக இருக்கிறது. பல அறிக்கைகளை இந்த ஆண்டில் தமிழிலே பெயர்த்திருக்கிறார்கள். நிதி நிலைக் குறிப்பு 1960–61, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 1960–61-ம் ஆண்டுக்கான வேலைத் திட்டங்கள், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் முதல் 4 ஆண்டுகளுக்கு முன்னேற்றம், நிதி நிலைச் சுருக்கம்—இவை புதியதாகத் தமிழிலே வந்திருக்கின்றன. அதற்காக நான் மகிழ்ச்சி அடைகிறேன், நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். மேலும், இந்த ஆண்டு இன்னொரு முறையிலும் ஒரு சிறந்த ஆண்டாக விளங்க இருக்கிறது. 1960-ம்

22nd March 1960] [Vidwan T. Muthukannappan]

ஆண்டு ஜூன் மாதம் முதல் கல்லூரியிலே தமிழ் மொழி மூலம் தாய் மொழி மூலம் பாடங்கள் போதிக்கப்பட இருக்கின்றன. இது பெரிதும் பாராட்டக்கூடிய ஒரு செயல். இதுபற்றிப் பல பத்திரிகைகளிலே, தமிழ்ப் பத்திரிகைகள் உட்பட, கடுமை யான எதிர்ப்புகள் இருக்கின்றன. இதைப் பல படித்தவர்கள், ஆங்கில மோகத்தில் ஆழ்ந்திருப்பவர்கள் இவர்களெல்லாம் மிக வன்மையாக எதிர்க்கிறார்கள், கண்டிக்கிறார்கள். இந்தச் சட்ட மன்றத்தில் கூட எனது மதிப்பிற்குரிய நண்பர் திரு. ரஸா கான் அவர்கள் மிக வன்மையாகக் கண்டித்தார்கள். அதோடு கனம் அங்கத்தினர் உயர் திரு. பாலசுப்பிரமணிய அய்யர் கூட மிக வன்மையாக இல்லையானாலும் கூட, ஓரளவு அதைக் கண்டித்தார் கள். இதையெல்லாம் நினைக்கிறபொழுது, எனக்கு ஓரளவு வியப்பாகத்தான் இருக்கிறது. அவர்கள் "மிக அவசரமாக இப்படிக் கொண்டு வருகிறார்கள், அப்படி என்ன அவசரம், என்ன அவசியம்?" என்று சொன்னார்கள். நான் நினைக்கிறேன். ஓரளவு நிதி அமைச்சர் அவர்கள் மிக மெதுவாக, ஆமை வேகத்தில் போகிறார்கள் என்று, ஆனால் கனம் அங்கத்தினர் திரு. ரசா கான் போன்ற நண்பர்களுக்கு இது என்னவோ மிக அவசரமான காரியமாகத் தெரிகிறது. சுதந்திரம் வந்து 13, 14 ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டது. 13-14 ஆண்டுகள் ஆன பிறகும் கூட, சுதந்திரம் வந்த நாட்டிலே நாட்டு மொழி மூலம், தாய் மொழி மூலம் கல்வி கற்பிக்கப்படவில்லையானால், அது கேவலமாக இல்லையா என்று கேட்கிறேன். 13 ஆண்டுகளுக்குப் பின் மெதுவாக பல முறைகளைக் கையாண்டு, அதற்குரிய பல சாதனங்களையும் பிற வசதிகளையும் வைத்துக்கொண்டு ஆமை வேகத்தில் இயங்குவதைக் கூட எதிர்க்கிறார்கள். அதனால் அடிமை மோகத்தின் நிலை இன்னும் போகவில்லையா என்றுகூட நான் நினைக்கவேண்டியிருக்கிறது. பல அரிய காரியங்களைச் செய்திருக்கிறார்கள். 1960-ம் ஆண்டு ஜூன் முதல் கோவை அரசாங்கக் கல்லூரியில் தமிழ் மொழி மூலம் போதிப்பதை ஒட்டி, தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சிக் குழு என்பதை நியமித்து, நூல்களையெல்லாம் மொழி பெயர்க்க ஏற்பாடு செய்திருக் கிறார்கள். தமிழ் நாட்டிலே ஆங்கிலத்திலும் தமிழிலும் விஞ்ஞானம், உளநூல், தத்துவம், வரலாறு, பொருளாதாரம் போன்ற எல்லா நூல்களிலும் தேறியவர்களைக் கொண்டு, இந்த நூல்களையெல்லாம் மொழி பெயர்க்கச் செய்திருக்கிறார்கள்; வெளியிடச் செய்திருக்கிறார்கள், வெளியாகி வருகின்றன. 9-3 a.m. ஆட்சிச் சொல்லகராதி தந்திருக்கிறார்கள், சட்டச் சொல்லகராதி தந்திருக்கிறார்கள். ஆசிரியர் பயிற்சிக் குரிய அகராதி தந்திருக்கிறார்கள். மேலும் திறமை யானவர்களைக் கொண்டு தமிழ் மொழி மூலம் கற்பிப் பதற்கு ஒரு குழுவையும் அமைத்திருக்கிறார்கள். அவர்களெல் லாம் இரு மொழியிலும் திறமை வாய்ந்தவர்கள். இவர்கள் மூலம் செய்யப்படுகின்ற இந்தச் சோதனை நிச்சயமாக வெற்றி யளிக்கப்போகிறது. அதில் சந்தேகமே இருக்க முடியாது. தமிழ் நாட்டிலே உள்ள பேராசிரியர்களெல்லாம் இன்றைக்குத் தமிழ் மொழியிலே, தாய் மொழியிலே போதிக்கின்ற நாளை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படியே

மாணவர்களும் பேராவல் கொண்டிருக்கின்றார்கள். அதனாலே ஏதோ ஆங்கிலத்தின் கல்வித் தரம் குறைந்துவிடும் என்று சொல்லுவதை ஒத்துக்கொள்ளவே முடியாது. இதை அமைச்சர் அவர்களுக்குப் பலமுறை குறிப்பிட்டிருக்கிறார்கள். எனக்குத் தெரியும். ஆங்கிலத்தினுடைய தரம்கூட அதிகமாக உயர்த்தப்படும். எந்த முறையிலும் ஆங்கிலத்தினுடைய தரம் குறையாது. இப்பொழுது படிக்கின்ற மாணவர்களெல்லாம் ஆங்கிலத்தின் மூலம் கற்கிறார்கள். அவர்கள் கற்ற பிறகு, கல்லூரியை விட்டு வெளிவந்த பிறகு, என்ன கற்றார்கள் என்பது தெரியாது, பகல் கனவு போல் மறைந்துவிடுகிறது. அந்நிய மொழி மூலம் கற்பதற்குப் பதிலாக அவர்கள் தாய் மொழி மூலம் கற்றார்களேயானால், அவர்கள் கற்கின்ற அனைத்தும் அவர்களுடைய மனதில் பசுமரத்தாணிபோல் உறுதியாக, தெள்ளத் தெளிவாகப் பதியும். மேலும், இந்தத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு முன்னாலே கல்லூரித் தலைவர்களையெல்லாம் அணுகிக் கேட்டிருக்கிறார்கள். பல்கலைக்கழகத் துணைவேந்தர்களுடைய ஒத்துழைப்போடு, அவர்கள் அனுமதியைக் கேட்டுத்தான் செய்திருக்கிறார்கள். அவசர அவசரமாகச் செய்துவிடவில்லை. இது முழு வெற்றி அளிக்கப்போகிறது என்பதைத் தமிழ் நாட்டு மக்களுடைய சார்பாக தமிழ் நாட்டுக் கல்லூரி ஆசிரியர்களின் சார்ப்பாக நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இதைப் பற்றிக் கனம் அங்கத்தினர் திரு. ராஸாகான் அவர்கள் காரசாரமாகப் பேசினார்கள். ஆங்கில மொழியை விட்டுவிட்டு, தமிழ் மொழி மூலம் கற்றுக் கொடுப்பது விபரீதம் என்று கண்டிக்கிறார்கள். அதற்கு நான் சொந்தமாகப் பதில் அளிப்பதைவிட நம்முடைய நாட்டுத் தந்தை, நம்முடைய நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கித் தந்த உலகம் போற்றும் உத்தமர் மகாத்மா காந்தியடிகள் சொல்லியிருக்கிற, பேசியிருக்கிற, எழுதியிருக்கிற ஒரு சில கருத்துக்களை இங்கே வாசித்துக் காட்ட விரும்புகிறேன்.

காந்திஜி சொல்கிறார்கள்: " நமது நாட்டு இளம் ஆண்களும்,
5-30 p.m. பெண்களும், ஆங்கில மொழியையும், உலகிலுள்ள வேறு மொழிகளையும் எவ்வளவு வேண்டுமானாலும் படிக்கட்டும். படித்ததன் பயனை இந்தியாவிற்கும், உலகுக்கும் பயன்படும் முறையில், ஜகதீஸ் சந்திர போஸ் போலவும், பி.ஸி.ரே. போலவும், தாகூர் போலவும், அள்ளி அள்ளி வழங்கட்டும், இதை நான் மனப்பூர்வமாக விரும்புகிறேன். ஆனால், தாய் மொழியை மறந்து அதைப் புறக்கணிப்பதோடு நில்லாமல், இந்த மொழி பேசும் சமூகத்தில் நாம் பிறந்தோமே என்று வெட்கப்படவும் செய்கிறார்கள். சிறந்த கருத்துக்களைத் தாய் மொழியிலேயே சிந்தனை செய்யவும், சிந்தித்தவற்றை வெளியிடவும், முடியாதென்று நினைக்கிறார்கள். இது பெருந் தவறு". இப்படிச் சொல்லியிருக்கிறார்கள்.

ஹைதராபாத் சமஸ்தானத் தலைமைக் கல்வி அதிகாரி, நவாப் மஸுூத்ஜங் பகதூர் தாய் மொழி மூலம்தான் கல்வி கற்பிக்க வேண்டும் என்றபோது அது வன்மையாகக் கண்டிக்கப்பட்டது அடிகள் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. அப்பொழுது அவர்கள் சொல்கிறார்கள்: " ஆங்கில மொழி மூலம்

22nd March 1960] [Vidwan T. Muthukannappan]

தான் போதனை நடக்கிறது. இது பெரும் குறை. ஒரு நாட்டு மக்கள் அந்த நாட்டு இளைஞர்களுக்கு உயர் தரக் கல்வியையும் தாய் மொழி மூலமே கற்பிக்க வேண்டும். இது "அனைவரும் அறிந்த உண்மை" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

நண்பர்கள் இப்பொழுது ஆட்சேபிக்கிறார்கள். 1960-ல் இப்படி ஆட்சேபிப்பார்கள் என்று தோன்றியோ என்னவோ, 15, 20 ஆண்டுகளுக்கு முன்பே காந்தியடிகள் சொல்லியிருக்கிறார்கள். அது நமக்காகவே, இப்பொழுது எதிர்ப்பவர்களுக்காகவே சொன்னது போல் இருக்கிறது. தாய் மொழியையும், அதிலுள்ள இலக்கியச் செல்வத்தையும் படியாமல் அசட்டை செய்துவிட்டு, வேறொரு அந்நிய பாஷையைப் படித்து அந்த பாஷையிலும் அதனுடைய பேச்சு வழக்கிலும் நிபுணராக எண்ணி, நமது இளைஞர்கள் எத்தனையோ ஆண்டுகள் வீணாக்கிச் சுருங்குகிறார்கள். இப்படி வீணாக்கியும், தினசரி வாழ்க்கையில் எந்தப் பயனும் அவர்களுக்குக் கிட்டுவதாயில்லை. இவ்வாறு இளைஞர்கள் வீணாகத் தங்கள் சக்தியை விரயம் பண்ணுவது, நாட்டுக்கு அளவிட முடியாத நஷ்டமாகும். இந்த நஷ்டத்தை யாராலே கணக்கிட்டுச் சொல்ல முடியும்? குறித்த ஒரு மொழியில் சயன்ஸ் சம்பந்தமான கருத்துக்களையும் வேறு பல நுணுக்கமான விஷயங்களையும் தெளிவாக எடுத்துச் சொல்ல முடியாதென்றால், அந்த மொழியில் வளர்ச்சிக்கு இடமில்லை யென்றும் சிலர் சொல்லி வருகிறார்கள். இதைவிடப் பெரிய மூட நம்பிக்கை வேறு கிடையாது. பேசுகிறவர்களுடைய நடை, உடை பாவனைகளையும் வளர்ச்சியையும் அப்படியே பிரதி பலித்துக் காட்டுவதே மொழியாகும்.

"அன்னிய ஆட்சியால் நம் நாட்டுக்கு விளைந்த கேடுகள் பல. அவற்றில், அந்நிய மொழியாகிய ஆங்கில மொழியை வலிந்து புகுத்தி, நமது இளைஞர்கள் இழிந்த நிலையடைய வேண்டுமென்ற நோக்கத்தோடு அவர்களை ஆங்கிலம் படிக்கச் செய்திருப்பதும் ஒன்று. அன்னிய ஆட்சியின் பயனாய் இந்தியாவில் விளைந்துள்ள மிகப் பெரிய கேடுகளில் இதையும் ஒன்றாகச் சரித்திரம் சொல்லப் போகிறது. ஆங்கில பாஷை நம் மக்களுடைய சக்தியை உறிஞ்சி விட்டது. அதைப் படித்துப் படித்து, நம் மாணவர்களின் ஆயுளும் தேய்ந்துவிட்டது; ஆங்கில பாஷை, பொது மக்களிட மிருந்து இளைஞர்களைப் பிரித்துவிட்டது, படிப்புக்காகும் செலவை எவ்வளவோ அதிகப்படுத்திவிட்டது. ஆங்கிலப் படிப்பையே இன்னும் சொல்லிக்கொடுத்து வரும்படி விட்டு வைத்தால், அது நமது நாட்டின் உயிரையே அபகரித்துவிடு மென்பது நிச்சயம். ஆகவே, படித்த இந்தியர்கள் ஆங்கில பாஷையின் மீது வைத்திருக்கிற மோகத்தை எவ்வளவு விரைவிலே உதறித் தள்ளுகிறார்களோ, அவ்வளவுக்கு, அவர்களுக்கு மட்டுமன்றி பொதுவாக இந்தியர்கள், அனைவருக்குமே அதனால் நன்மையுண்டு" என்று ஆணித்தரமாகச் சொல்லியிருக்கிறார்கள். இது ஒன்றே போதும் அதை எதிர்க்கிறவர்களுக்குத் தக்க சூடு, பதில் என்று நான் நினைக்கிறேன். (சிரிப்பு.)

[Vidwan T. Muthukannappan] [22nd March 1960

அடுத்தபடியாக, கல்லூரி மாணவ மாணவிகளைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது உயர் நிலைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் மாணவர்களும் மாணவிகளும் சேர்ந்து படிக்கிறார்கள். இதனால் விளைந்துவரும் கேடுகள் கொஞ்ச நஞ்சமல்ல. உயர்நிலைப் பள்ளியிலும் கல்லூரியிலும் பணியாற்றியவன் என்ற முறையில் அனுபவத்தோடு சொல்லுகிறேன். கல்லூரி வகுப்புகளில் ஆண்களும், பெண்களும் சேர்ந்து படிப்பது தவறில்லை என்று அமைச்சரவர்கள் சொல்வதை ஓரளவுக்கு ஒத்துக்கொள்ள வேண்டியதுதான் என்றாலும் நமது இன்றையச் சூழ்நிலையில், அது அவ்வளவு சரியில்லை என்றே நினைக்கிறேன். எங்கு திரும்பினாலும், காதல் கட்டங்கள், எதை எடுத்தாலும், படித்தாலும் அதே நிலைமைதான், ஆண் பெண் உறவு பற்றியவைதான். பத்திரிகைகளை எடுத்தாலும், மாத, வார வெளியீடுகளைப் பார்த்தாலும், எங்கும் காதல் கதைகள்தான், ஆண், பெண் சம்பந்தமான காட்சிகள்தான். இந்த நிலையில், ஆண்களும், பெண்களும் சேர்ந்து படிப்பது முறையா, நன்றா ? அது இன்றைய நிலையில் இந்த மோசமான சூழ்நிலையில் நல்லதல்ல என்றுதான் தோன்றுகிறது. மேலும், மாணவிகள் காலேஜுக்கு வரும்போது கண்ணைக் கவரும் வண்ண உடைகளை அணிந்துகொண்டு, மெல்லிய நைலான் உடைகளை அணிந்துகொண்டு புது மணப் பெண்கள்போல் சிங்காரித்துக்கொண்டு வருகிறார்கள். கூடுமான வரையில் கல்லூரிகளுக்கு வரும்போது அவர்கள் சாதாரண உடையிலே, பகட்டில்லாத உடையிலே வருவதுதான் நல்லது. இதைப் பெற்றோர்கள் கவனிக்க வேண்டும். (ஸ்ரீ மகமது ரசாகான் : அதை ஏன் நீங்கள் பார்க்கிறீர்கள் ? ) (சிரிப்பு) தனியார் கல்லூரிகளில் செய்ய முடியாவிட்டாலும், சர்க்கார் கல்லூரிகளிலாவது கூடுமான வரையில் மாணவிகள் ஆடம்பரமற்ற உடையில் வருவதுபற்றிக் கண்டிப்பாக ஏற்பாடு செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு கூட, இன்னொரு தீய பழக்கமும் இருக்கிறது. அதைக் கேள்வி நேரத்தின் போது ஒரு முறை கேட்டதற்கு, அமைச்சரவர்கள் " அது சரிதான் " என்று சொல்லியிருக்கிறார்கள். அதைக் கேட்க எனக்கு வியப்பாக இருக்கிறது. பெண்கள் எல்லோரும் கல்லூரிகளில் ஆசிரியர்களைப் பெயர் சொல்லி அழைக்கிறார்கள். மிஸஸ் ஐயா, மிஸ் மோகனா என்று. இது நம் நாட்டுப் பண்புக்கும், மரியாதை முறைக்கும், பழக்க வழக்கத்திற்கும் முற்றிலும் முரணானது. பிள்ளைகள் பெற்றோர்களைப் பெயர் சொல்லி அழைப்பதைப் பார்த்துக்கொண்டு இருப்போமா ? பெற்றோர்களை விடச் சிறப்பாக நினைக்கக் கூடிய, "ஆசிரியர்களையும், தலைமை ஆசிரியர்களையும் பேர் சொல்லி அழைக்கிறார்களே ? (குறுக்கீடு: பின் எப்படி அழைப்பது ? ) " அம்மா " என்று தமிழிலும், (Madam ) என்று ஆங்கிலத்திலும், " சார் " என்கிறோமே ஆண்களை, அம்மாதிரி, அழைக்கலாமே. அப்படியில்லாவிட்டால், அது நம் பண்பாட்டுக்கு முரணானது. இந்த முறையை மாற்ற அரசாங்கக் கல்லூரிகளிலாவது ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

22nd March 1960] [Vidwan T. Muthukannappan]

அடுத்தபடியாக, இப்பொழுது சிந்தித்துப் பார்த்தால், பண மெல்லாம் ஒரு சிலரிடத்திலே குவிந்து கிடக்கிறது. திரைப்பட முதலாளிகளிடத்திலும், நடிகர்களிடத்திலும் சேர்ந்திருக்கிறது. ஆதலால் நான் நினைக்கிறேன், பட முதலாளிகளுக்கும், நடிகர் களுக்கும் வருமான வரி அதிகமாக ஏன் போடக்கூடாது? ரூ. 1,000 வரை 10 சதவீதம் என்றும், 5,000 வரை 15 சதவீதம் என்றும், 5,000-க்கு மேல் 20, 25 சதவீதம் என்றும் ( Gradnated or progressive taxation) முறையைக் கையாள வேண்டும். (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம்: இப்பொழுது அவர்களுக்கு வருமான வரி இருக்கிறது.) குறைவாக இருக்கிறது. (ஸ்ரீமதி மஞ்சு பாஷினி: அதிகமாகத்தான் இருக்கிறது.) அப்படியிருந்தால் மகிழ்ச்சியடைகிறேன். (குறுக்கீடு: சினிமாவுக்கு நீங்கள் போவதில்லையா ? (I do not go to cinemas.)

அடுத்தபடியாக, மீனவர்கள் நிலைமையைக் குறித்து ஒரு சில வார்த்தைகள். செங்கல்பட்டு, தென்னாற்காடு, தஞ்சை போன்ற இடங்களிலே, மீனவர்களுக்குக் கட்டுமரம் கிடைப்பது என்பதே முடியாத காரியம். கட்டுமரம் வேண்டுமானால், அவர்கள் சிலோன் போக வேண்டும், அல்லது மலையாளத்திற்குப் போக வேண்டும். செங்கற்பட்டு, வட ஆற்காடு போன்ற மாவட்டங் களிலுள்ள தனிப்பட்டவர்கள் அவ்வளவு தூரம் போய்க் கட்டு மரம் வாங்க முடியாமல் வேதனைப்படுகிறார்கள். சமீபத்தில் கன்னியாகுமரி மாவட்டத்து மீனவர்களுக்கு ரூ. 40,000 செலவில் அரசாங்கம் கட்டு மரம் வாங்கிக் கொடுக்கவும் ரூ. 8,000 மான்ய மாகக் கொடுக்கவும் ஏற்பாடு செய்திருப்பதாகத் தெரிகிறது. அதற்காக நான் மீனவர்கள் சார்பில் கனம் மந்திரி அம்மையார் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆனால் கன்னியா குமரியில் உள்ளவர்கள் வலது கையை நீட்டினால் மலையாளம், இடது கையை நீட்டினால் சிலோன் இருக்கிறது. அங்கெல்லாம் கட்டு மரம் சுலபமாகக் கிடைக்கிறது. ஆனால், அதிகத் தொலைவில் இருக்கிற செங்கல்பட்டு, தென்னாற்காடு மக்களுக்குக் கட்டு மரம் கிடைப்பதே மிக மிகக் கடினமான காரியம். அங்கே உள்ள மக்களுக்குத்தான் உதவி அவசியம். அவர்கள் கட்டுமரம் கிடைக்காமல் கஷ்டப்படுகிறார்கள்.

Help in need is help indeed
Thy need is more than mine.

என்பதைப் போல் எங்கள் மாவட்டத்தைவிட உங்கள் மாவட்டத் தேவை அதிகம், அவசியம் என்று எண்ண வேண்டும் என்று வேண்டுகிறேன். எங்கே உதவி அதிகம் தேவையோ, அங்கே கொடுக்க வேண்டும் என்பதுதான் முறை. அந்த முறையிலே பார்க்கும்போது, செங்கல்பட்டு, தென்னாற்காடு, தஞ்சை மாவட்டங்களிலே மீனவர்களுக்குக் கட்டுமரம் வாங்குவதற்கு உடனடியாகத் தக்க உதவிகளை அளிக்க வேண்டும், கட்டுமரம் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 5-40 p.m. மேலும் 65 விசைப் படகுகள் தமிழ் நாட்டில் ஓடிக் கொண்டிருக் கின்றன. ஆனால், செங்கல்பட்டில் ஒன்றே ஒன்றுதான் இருக் கிறது. திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களிலே 10,

படகுகளும், 9 படகுகளும், இருக்கின்றன. அடுத்துவரும் ஆண்டில், 30 படகுகளும், நடைமுறை ஆண்டில் 37 படகுகளும் வரவிருக்கின்றன. அப்படி வந்தால், அதில் 10, 12 சென்னைக்கும், செங்கல்பட்டுக்கும் அதே போல் ஏனைய மாவட்டங்களுக்கும் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

படகு தங்கு தளங்கள் கடலூர், நாகப்பட்டணம், ராயபுரம், மகாபலிபுரம் முதலிய இடங்களில் கட்டப்போவதாகத் தெரிகிறது. ஆனாலும் அது மந்தமாகத்தான் இருக்கிறது. வேகமாக வேலை நடைபெறவில்லை. அம்மாதிரிப் படகு தங்கு தளத்திற்குயான இடங்களில் செங்கல்பட்டிலுள்ள கோவளமும் ஒன்று. அங்கே குடா வளைந்திருக்கிறது. செங்கல்பட்டு மாவட்ட மீனவர்களுக்கு அது மிகவும் உபயோகமுடையதாக இருக்கும். ஆதலால் அங்கே ஒரு தளத்தை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சென்னையில் கோல்ட் ஸ்டோரேஜ், (உறை நிலையங்கள்) இரண்டாவது வேண்டும். இரவு அதிக நேரம் ஆகிவிட்டால், மீன்கள் விற்பனை ஆகாவிட்டால் அவைகள் கெட்டு விடுகின்றன. ஆகவே, அதற்காக உறை நிலையங்கள் (Cold storage) சென்னையிலே அமைக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, சைக்கிள் ரிக்ஷாக்கள்பற்றி ஒரு சில வார்த்தைகள். சென்னையிலே மாத்திரம், 1,004 சைக்கிள் ரிக்ஷாக்கள் இருக்கின்றன. அவை Poor men's Taxi களாக, ஏழை மக்களின் டாக்சிகளாக இருக்கின்றன. இப்பொழுது, ஓட்டுபவர்கள் 2,008 பேரும், 1,004 சொந்தக்காரர்களும் இருக்கிறார்கள். 15,000 ஜனத்தொகையினர் இந்த சைக்கிள் ரிக்ஷா ஓட்டுவதனால் பிழைக்கிறார்கள்.

15 ஆயிரம் மக்கள் வாழ்கிறார்கள், சென்னை நகரில் மாத்திரம் இந்த சைக்கிள் ரிக்ஷாவை நம்பி. இந்த ஆண்டுக்கு இதை ஆயிரமாகவாவது அதிகப்படுத்தினால், மிகவும் நன்றாக இருக்கும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும், சைக்கிள் ரிக்ஷா ஓட்டுவதற்கு நாம் ஊக்கம் காட்டினால், பல தீய சக்திகளை நடக்கவிடாமல் பார்த்துக்கொள்ளலாம். சைக்கிள் ரிக்ஷா ஓட்டுகிறவர்களில் பலர் தீய சக்திகளில் முன்னர் ஈடுபட்டவர்கள். அவர்களுக்குச் சைக்கிள் ரிக்ஷாவை ஓட்டுவதற்கு வசதி செய்துகொடுக்காவிட்டால், பல தீய சக்திகளை அதிகப்படுத்துவதாக ஆகும். இப்பொழுது சைக்கிள் ரிக்ஷாக்கள் ஓட்டுவதால், பல தீய சக்திகள் குறைந்து மறைந்து வருகின்றன. ஆகவே, அதிகப்படியான சைக்கிள் ரிக்ஷாக்களுக்கு லைசென்சு கொடுத்து உதவ வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த ஆண்டு கனம் அங்கத்தினர்களுக்கு ஒரு அழகான டயரியை சப்ளை செய்திருக்கிறார்கள். அதன் அட்டையில் "லெஜிஸ்லேட்டர் டாப்ளட் டயரி" என்று எழுதப்பட்டிருக்கிறது. அதில் ஆங்கில வருஷமாகிய "1960" என்றும் குறிப்

22nd March 1960] [Vidwan T. Muthukannappan]

பிடப்பட்டிருக்கிறது. அதோடு கூட அதன் கீழ் ஒரு வருஷமும் எழுதப்பட்டிருக்கிறது. அது என்ன என்று விளங்கவில்லை. இது "சாகா ஈரா 1881-1882" என்று இருக்கிறது. நமக்குத் தமிழ் வருஷம் தான் அதிகமாகப் பழக்கத்தில் இருக்கிறது. இந்த சாகா வருஷத்தை யார் பயன்படுத்திக்கொண்டிருக்கிறார்களோ தெரியவில்லை. சென்னை இராச்சியத்தில் அது பழக்கத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. நமக்கு இன்று விகாரி வருஷம் பங்குனி மாதம் 9-ம் தேதி என்றால்தான் நன்றாகத் தெரியும். இதில் அப்படிப்பட்ட தமிழ் வருஷம், மாதம், தேதிகளைக் காணவில்லை. ஆகவே, அடுத்த வருஷமாவது இந்த நாட்குறிப்பில் தமிழ் வருஷம், மாதம் தேதிகளைச் சேர்த்து அச்சிட்டுத் தர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

பிறகு, ஒன்றே ஒன்றை மட்டும் இறுதியாகச் சொல்லிக் கொண்டு முடிதிதுக்கொள்ளுகிறேன். இந்தக் கவுன்சில் மேல்-மன்றத்தில் நாம் இங்கு இருக்கிறோம். இதற்கு முன் இப்பொழுது அசெம்பிளி கட்டிடம் இருக்கும் இடத்தில் இச்சபை இருந்து வந்தது. இப்பொழுது அதை அவர்களுக்கு விட்டு நாம் இங்கே வந்திருக்கிறோம். இங்கு உட்கார்ந்திருப்பதைப் பார்க்கும்போது எனக்கு சக்திமுற்றப் புலவருடைய பாட்டு ஒன்று ஞாபகத்திற்கு வருகிறது. அதாவது "கையது கொண்டு மெய்யது பொத்தி, காலது கொண்டு மேலது தழுவி, பேழையுள் இருக்கும் பாம்பு என உயிர்க்க வேண்டி இருக்கிறது". இங்கு குளிர் காலத்தில் வேண்டுமானாலும் இருக்கலாம், ஒருவரோடு ஒருவர் நெருக்கியடித்துக் கொண்டு. ஆனால் கோடை காலத்தில் இங்கே இருக்க முடியவில்லை, புழுக்கமாக இருக்கிறது. அதனால் கவுன்சிலுக்கு என்று ஒரு விசாலமான கட்டிடம் தேவை. ஒரு அழகான கட்டிடம் கட்டுவதாக ஏற்பாடு செய்யப்பட்டு அதற்காகத் திட்டமிட்டுக் கோடுகளையெல்லாம் போட்டார்கள். ஆனால், அதன் பிறகு என்ன காரணத்தினாலோ, கட்டிடம் கட்டப்படாமல் தாமதமாகிறது. அதற்கு எதிர்ப்பு இருக்கிறது என்று நினைத்துத் தாமதமாக்குகிறார்களோ என்னமோ ஒன்றும் தெரியவில்லை. சம்பந்தமில்லாமல் எதிர்ப்பது புரியவில்லை எது எப்படி இருந்தாலும், நமக்கு நல்ல கட்டிடம் வேண்டும். அசெம்பிளிக்கு இருப்பது போன்று கவுன்சிலுக்கும் தனியாகக் கட்டிடம் இருக்க வேண்டும்.

அதைப் போலவே, அசெம்பிளிக்கு என்று தனியாக டிபார்ட்மென்ட் இருப்பது போன்று, கவுன்சிலுக்கும் தனியான ஒரு டிபார்ட்மென்ட் ( Council Secretariat ) இருக்கவேண்டியது அவசியமாக இருக்கிறது. கவுன்சிலுக்குத் தனிப்பட்ட நிர்வாகம் (அட்மினிஸ்ட்ரேஷன்) இருக்க வேண்டியதும் அவசியம். தனிப்பட்ட முறையில் அந்தந்தக் காரியங்கள் தனியாகவே செயல்பட வேண்டும். அப்படி இருப்பதுதான் நல்லது. ஒருவரைப் பார்த்து இன்னொருவர் இருக்க வேண்டும் என்பது நல்லதல்ல. ஆகவே, கவுன்சில் டிபார்ட்மென்டைத் தனியாக அமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

[22nd March 1960

SRI A. CHIDAMBARA MUDALIAR: கனம் தலைவர் அவர்களே, 1960–61-ம் வருஷத்திற்கான வரவு செலவுத் திட்டம் போற்றத்தக்க பல அம்சங்களைக் கொண்டது. ஆழ்ந்து நோக்குவோர் இதை எளிதில் காணக்கூடும். குறை காண்பதே குறியாகக் கொண்டோரின் கூற்று வேருக இருக்கலாம்.

குணம் நாடிக் குற்றமு நாடி அவற்றுள்
மிகை நாடி மிக்க கொளல்

என்ற வள்ளுவரின் வாக்குப்படி நோக்குவோமானுல், நல்ல அம்சங்கள் பல மிகுந்திருப்பதை நன்கறியலாம்.

நம் நாட்டின் ஜீவநாடி விவசாயம். இதை நன்கு வலியுறுத்தி விவசாய அபிவிருத்திக்குத் தேவையான, இன்றியமையாத துணைத்திட்டங்கள் பலவும் வகுக்கப்பட்டு, முறையே நிறைவேற்றப்பட்டும், மேலும் நிறைவேறிப் பூர்த்தியடைய வகைகள் செய்யப்பட்டுமிருப்பதைப் பாராட்டாதிருக்க முடியாது.

நீர், நிலம், உரம், வித்து, எருது பராமரிப்பு ஆகிய எல்லா அம்சங்களுமே சம முக்கியத்வம் அளிக்கப்பட்டு, பலவகையிலும் விஞ்ஞான முறைகளில் அபிவிருத்தி காண ஏற்பாடுகளும், உற்பத்தி பெருக வகைகளும் இடம் பெற்றுள்ளன.

நீர். அநேகமாக சாத்தியமான எல்லாப் பெரிய நீர்ப் பாசனத் திட்டங்களும் நிறைவேற்றப்பட்டு, சிறிய பாசனத் திட்டங்கள் பலவும் வரம்புக்குட்பட்டு மேற்கொள்ளப்பட்டிருப்பதோடு, நுற்றுக்கணக்கான குளங்கள் வெட்டி மராமத்துக்கும், ஆயிரக்கணக்கான கிணறுகள் வெட்ட உதவுவதற்கும் ஏற்பாடாகியிருக்கிறது.

நிலம் சம்பந்தமாக, நிலத்தின் வளம் குன்ருதிருக்க, மண் அரிப்பைத் தடுக்கத் திட்டம், மண்வளம் அறிந்து தக்க வண்ணம் சீர்திருத்திக்கொள்ள உதவ, மண்வள சோதனை நிலையங்கள், ஆகிய ஏற்பாடுகள்—நிலம் வளம் குறையாதிருக்கவும் விருத்தியடையவும் உதவும் பெருந்துணை என்பதை யாரும் மறுக்க முடியாது.

உரம் சம்பந்தப்பட்ட மட்டில், ரசாயன உரம் 2 லட்சம் டன் வரை வழங்க ஏற்பாடாகியிருப்பதுடன், கழிவு உரம் 6 லட்சம் டன் அளவும், குப்பை உரம் 12 லட்சம் டன்னுக்கும் அதிகமாகவும் கிடைக்கவும், ஏராளமான பசுந்தழை உர உற்பத்திக்கும், வசதிகள் பல செய்யப்பட்டிருப்பதும், உற்பத்திப் பெருக்கத்திற்கு உறுதுணையாகும். ரசாயன உர விநியோகத்தில் விஷமம் ஏற்படாதிருக்க, கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமே அவற்றை விவசாயிகளுக்கு நேரடியாக விநியோகிக்க ஏற்பாடாக வேண்டும். ஆகவே, நகரங்களிலிருந்து விநியோகமாவது உடனடியாகத் தடைபடுத்தப்பட வேண்டும். நகரத்தில் விநியோகமாவதால், உரமானது, உடனுக்குடன் வியாபாரிகள் கை மாறுவதற்கும் கலப்படம் முதலிய பல ஊழல்களுக்கும் இடம் தருகிறது. இம்மாதிரியான பல புகார்கள் சதா

22nd March 1960] [Sri A. Chidambara Mudaliar]

கிடைத்துக்கொண்டிருப்பதால், ரசாயன உர விநியோகத்தில் கூடுமான அளவு விஷமங்கள் குறைவதற்கு உதவ நகரங்களில் விநியோகமாவது தடையாகி, கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் நேரடியாகக் கிராமங்களில் விவசாயிகளுக்கு விநியோகமாக ஏற்பாடாக வேண்டும்.

வித்து சம்பந்தப்பட்ட மட்டில், உற்பத்தி பெருக நல்ல ரக வித்துக்கள் நாடெங்கும் கிடைக்க உதவ பரந்த அளவில் விதைப் பண்ணைகளுக்கு ஏற்பாடாகியிருப்பதும் குறிக்கத் தக்கது.

கால்நடை வளர்ச்சிக்கும், அவற்றின் தர உயர்வுக்கும், பராமரிப்புக்குமான விஞ்ஞான ரீதியிலான அபிவிருத்தித் திட்டங்கள் பல அமைந்துள்ளதும் போற்றத்தக்கதாகும்.

மின்சார சக்தியாலும், எண்ணெய் இயந்திரங்களாலும் இயங்கும் நூற்றுக்கணக்கான இறைவைக் குழாய்களுக்கு நிதி ஒதுக்கப்பட்டுள்ளது.

இந்த அஸ்திவார பலத்தால், நெய்வேலியில் உற்பத்திக்குத் திட்டமிடப்பட்டுள்ள "ஊரியா" ரசாயன உரமும் விநியோகத்திற்கு வரும்போது, நமது விவசாய உற்பத்தி இன்று பற்றுக் குறையிலிருக்கும் நிலைமாறி, உபரி நிலையை அடையவும் கூடும். 5-50 p.m.

எனினும் பல்லாயிரக்கணக்கான சிறு விவசாயிகள், இந்த அனுகூலங்கள் எல்லாம் இருந்தும், அவற்றின் முழுப் பயனை அடைய முடியாத நிலையில், பின்தங்கி நிற்க வேண்டிய நிர்ப்பந்த சூழ்நிலையில் இருந்து நலிந்து வருவதை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நில உச்ச வரம்புபற்றிய மசோதா வரவிருக்கும் தருணமும் அணுகியிருப்பதால், இந்த அம்சத்தை இன்று வற்புறுத்த விரும்புகிறேன்.

நிலமானது சிறு சிறு உடமைகளாக, பல தாக்குகளாகத் துண்டாடப்படும் கொடுமையையே குறிப்பிடுகிறேன். இது உடனடியாகத் தவிர்க்கப்பட வேண்டும். பழக்க வழக்கங்கள், உடைமைபற்றி நிலவி வரும் கருத்துக்கள் காரணமாகப் பத்து செண்டு நிலமானாலும் பாதி பிரிப்பது என்ற முறை எப்படியோ நீடித்துப் பாழ்படுத்தி வருகிறது. இது யாருக்கும் நன்மை பயப்பதில்லை என்பது தெளிவு. இருந்தும் தொடர்ந்து வழக்கில் உள்ளது. இது தடைபடுத்தப்பட வேண்டும்.

நிலவுடைமைக்கு உச்சவரம்பு கட்டுவது போலவே, நிலம் பிரிக்க முடியாதபடி குறைந்தபட்ச வரம்பும் கட்டப்பட்டு, குறைந்தபட்சப் பண்ணை விஸ்தீரண நிர்ணயமும் கூட விதிக்கப்படலாம். இவ்வாறு செய்வதன் மூலம், சிக்கனமும் லாபகரமுமான சாகுபடிக்கு உதவுவதோடு, உற்பத்திப் பெருக்கத்திற்கும் வழி செய்ததாகும். ஏற்கனவே துண்டாடப்பட்டும், உடைமை காரணமாகச் சிதறிக் கிடக்கும் நிலங்களை, தக்க சலுகையோடு கூடிய உடனடியான நடவடிக்கைகளை மேற்கொள்வதன் மூலம் இணைப்புக்கு உற்சாக மூட்ட இயலும். உதாரணமாக, பாகப் பிரிவினை அல்லது இதர காரணங்களால், இரண்டு மூன்று

அல்லது மேற்பட்ட ஸ்தலங்களில் பல துண்டுகளாக உள்ள நிலங்களை, ஆங்காங்கு அண்மையில் உள்ள நிலங்களுடன் இணைக்க சம்மதப்படுவோர்களுக்கு மேற்படி இணைப்பின் மூலம் அனுகூலமடைந்தவர்களிடமிருந்தோ அல்லது உச்ச வரம்பின் மூலம் கிட்டும் உபரியிலிருந்தோ, ஒரே வட்டமான நிலப்பரப்பு, தகுந்த அளவில், பதிவுக் கட்டணமின்றியோ பர்வர்த்தனையாகும் என்றும், கிணறு போன்ற விசேஷச் சலுகைகளும் துரிதமாகக் கிடைக்கக்கூடும் என்ற உத்தரவாதமும், இதற்கு நல்லபடியான தூண்டுதலாக அமையலாம்.

இம்மாதிரியான துண்டு நில இணைப்பு பஞ்சாப், உத்தரப் பிரதேசம் முதலிய இராச்சியங்களில், கூட்டுறவு முறையில் சாத்தியமாக்கப்பட்டிருக்கிறது. நம் இராச்சியத்திலும் இது எவ்வகையிலாவது சாத்தியமாக்கப்பட்டால், பல்லாயிரம் சிறு விவசாயிகள் இதன் மூலம் பெரும் பயனடைவர். விவசாய உற்பத்தியில் சிறு உடைமையாளர்களும் நவீன விஞ்ஞான முறைகளைப் பயன்படுத்தவும், மொத்தத்தில் உற்பத்தி பெருக வும், இத் திட்டம் பெரிதும் உதவும் என உறுதியாகக் கூற முடியும்.

விவசாயச் சீர்திருத்த சம்பந்தமாக எனது இக்கருத்தை நன்கு பரிசீலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்வதுடன், இதுபற்றி மேலும் ஆராய்ந்து புள்ளி விவரங்கள் சேகரித்துப் பரிகாரத் திற்கான நல்ல முடிவுகளை எடுக்க மிகுந்த அனுபவம் வாய்ந்தவர் களைக்கொண்ட குழு ஒன்றை அமைக்கும்படியாகவும் இதன் முக்கியத்துவத்தை உணர்ந்து உடனடியான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறும் கேட்டுக்கொள்கிறேன்.

கிணற்றுப் பாசனத்திலும் சிறு கைத்தொழில் துறையிலும் உதவக்கூடிய காற்றின் விசையால் இயங்கும் காற்றாடி இயந்திரம் பற்றிய பரிசீலனை ஒன்று சென்ற ஆண்டு, விவசாயத் துறையின ரால் நிபுணர் குழு ஒன்றின் ஆய்வுக்கு விடப்பட்டிருந்தது. காற்று வளத்தைப் பயன்படுத்தும் இந்தத் திட்டம் வெற்றி பெற்றால், செலவு அதிகமில்லாமலே மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, தென்னாற்காடு, செங்கற்பட்டு போன்ற ஜில்லாக் களில், காற்று வேகம் நிறைந்த பகுதிகளில் உள்ள பெருவாரி யான எளின உழவர்களும் சிறு கிராமக் கைத்தொழில்களும் இதன் மூலம் நல்ல பயன் அடையக்கூடும். ஆதலால், இந்தப் பரிசீலனை முடிவைத் துரிதப்படுத்தவும், மேற்கூறப்பட்ட ஜில்லாக்களில் குறிப்பிட்ட பகுதிகளில், வெகு சீக்கிரத்தில் பைலட் திட்டங்களுக்கும் வகை செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

அபிவிருத்தித் திட்டங்கள் பலவற்றாலும் ஏற்பட்டுள்ள பணப் புழக்கப் பெருக்கத்திற்குத் தகுந்த அளவில் அத்யாவசியத் தேவைக்கான பண்டங்களின் உற்பத்தி பெருகாத நிலையில் விலைவாசிகள், பண்டங்களின் இயற்கையான தட்டுப்பாட்டால், விஷம் போல் ஏறிவருவது எப்படியாவது தடுக்கப்பட வேண்டும். எல்லாத் துறையிலும் உற்பத்தி பெருகி, பண்டங் கள் இயற்கையான விலைச் சரிவை எய்தட்டும் என்று காத்திருப்

22nd March 1960] [Sri A. Chidambara Mudaliar]

பது ஆபத்தானது. அத்யாவசியப் பண்டங்களாவது பரந்த அளவில் நியாய விலையில் கிடைக்கச் செய்ய வேண்டும். வாழ்க்கைத் தேவைகளின் விலைகளில் சமநிலை நிலவ நடவடிக்கை எடுக்கத் தவறினால், கூலி உயர்வுக் கிளர்ச்சிகளும், வேலை நிறுத்தங்களும், அவற்றால் உண்டாகும் மனக்கசப்பும், வேண்டத்தகாத விளைவுகளும், பெரும் விஷமாக நிலைபெற்று இயங்கி அமைதியைக் குலைப்பனவாகவும், அபிவிருத்திகளையும் உற்பத்திப் பெருக்கத்தையும் கூடத் தடைபடுத்துவனவாகவும் அமையக் கூடும் என்பதையும் கூறி எச்சரிக்க விரும்புகிறேன்.

ஓரளவு வேலையில்லாத் திண்டாட்டத்தையும், பெரும் அளவில் வீடில்லாக் கஷ்டத்தையும் சமாளிக்க, வேலை வாய்ப்புகளை கணிசமான அளவில் விஸ்தரிக்க, நாடெங்கிலும் உள்ள சன நெருக்கடி மிகுந்த நகர்ப்புறங்களிலும் பேரூர்களிலும், நகர அபிவிருத்தித் திட்டங்களை விஸ்தரித்து, குறைந்த செலவில் அமையும் ஏராளமான வீடுகளைக் கட்ட ஏற்பாடாக வேண்டும். கோடிக்கணக்கான செலவில் நூற்றுக்கணக்கான வீடுகள் அமைப்பது தடுக்கப்பட்டு லட்சக்கணக்கான வீடுகள் கட்டப் படுவதற்கு இந்த வசதிகள் பயன்படுத்தப்பட வேண்டும்.

சரச விலைகள் நிலவும் வரையிலாவது இந்தமாதிரியான ஏற்பாடுகள் தொடர்ந்து அமுலாகி வந்தால், நாட்டில் குடியிருப்புத் தட்டுப்பாடு குறைவதுடன், வேலையின்மையாலும் விலை உயர்வுகளாலும் பாதிக்கப்பட்டு, வறுமையில் உழலும் லட்சக்கணக்கான உழைப்பு சக்திகளுக்கும் வாழ்க்கைக்கு வசதி செய்ததாகும். இவ்வித ஆக்க ரீதியான கைங்கர்யத்திற்காக அபிவிருத்திக் கடன்கள் எழுப்பப்பட்டால், நல்லமுறையில் முதலீட்டுக்கும் வகை செய்ததாகும்.

இதற்கிடையில் ஒன்றே ஒன்று சொல்லிக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். மதுரை ஜில்லாவில் போலீஸ் பாதுகாப்பில் மக்கள் நம்பிக்கை இழந்து வரும்படியான நிகழ்ச்சிகள் கவலை தருவனவாயிருக்கின்றன. போலீசில் பொறுப்புள்ளவர்கள் கடமையைப் புறக்கணிப்பதுடன் ஒரு தலைப்பட்சமான நடவடிக்கைகளின் மூலம் நியாய விரோதமாகவும் அதிகாரத் துஷ்பிரயோகம் செய்து, குறை கூறுபவர்கள் மீது பழிவாங்கும் நடவடிக்கைகளை மேற்கொண்டு வருவதும் தடுக்கப்பட வேண்டும்.

உதாரணமாக, மதுரைத் தாலூகா வாகைக்குளம் கருத்தப்பிச்சம்பலம் 1959 டிசம்பர் மாதத்திலே தன்னுடைய உயிருக் ஆபத்து உண்டாக்க ஆயத்தம் செய்து கொண்டிருப்பவர்கள்பற்றிப் புகார் செய்து ஜில்லா பெரிய அதிகாரிக்குத் தெரிவித்திருந்தும், பாதுகாப்புக் கோரியிருந்தும் கூட, போலீசார் எந்தவித நடவடிக்கைகளும் எடுக்கத் தவறியதன் காரணமாக மேற்படி நபர் எதிர்பார்த்தபடியே கொலை செய்யப்பட்டு உயிர்துறக்க நேர்ந்ததுள்ளது.

[Sri A. Chidambara Mudaliar] [22nd March 1960

தக்க விசாரணையோ பாதுகாப்பு நடவடிக்கையோ எடுக்கப்பட்டிருந்தால், இந்தக் கொலை தவிர்க்கப்பட்டிருக்கக் கூடும் என்ற கருத்து தாலூகாவில் எங்கும் பரவி நிற்கிறது. மேலும், மதுரை தாலூக்கா, காயம்பட்டி, அரும்பலூர் முதலிய கிராமங்களில் போலீசாரால் பொய்க் கேஸ்கள் போடப்பட்டு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் பொய்க் கேஸ் என்று தள்ளுபடி செய்யப்பட்டுள்ளன.

தவிரவும், காளிகரப்பான், அரும்பலூர் முதலிய இடங்களில் நடந்த உண்மையான குற்றங்கள் பல போலீஸ் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டிருந்தும், தக்க நடவடிக்கை எடுக்கப்படாமல் தள்ளப்பட்டுள்ளன. உதாரணமாக, காளிகரப்பான் கிராமத்தில் கண்மாயில் மீன் திருடியவர்கள் பலரைக் கைது செய்தும் ஜாமீனில் விடுதலை செய்தும் அதன் பின் எவ்வித மேல் நடவடிக்கையுமின்றி விடப்பட்டுள்ளார்கள். ஆனால், சென்ற பசலியில் இதே கண்மாயில் இதே குற்றச்சாட்டுக்குள்ளானவர்கள் போலீஸ் நடவடிக்கையின் மூலம் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள். அப்படியிருந்தும், குற்றம் செய்தவர்கள் இந்தப் பசலியில் தண்டனையின்றி விடப்பட்டுள்ளார்கள். இம்மாதிரியான நிலை நீடிக்குமானால், மக்களுக்குச் சட்டம், பாதுகாப்பு முதலியவற்றின் மீது நம்பிக்கை குறைந்து குற்றங்கள் மலிய இடமளிக்கும். ஆதலின், உடனடியாகத் தக்க நடவடிக்கைகளின் மூலம் இப்போக்கு தடைபடுத்தப்படவேண்டும்.

மொத்தத்தில் இவ்வாண்டு வரவு-செலவுத் திட்டமானது, விவசாயம், கல்வி, சுகாதாரம், பெரிய சிறிய குடிசைக் கைத்தொழில்கள், போக்குவரத்து, ஜாகை வசதி ஆகிய எல்லாத் துறைகளிலும் போதிய கவனம் செலுத்தி வரம்பிற்குட்பட்டு பல முன்னேற்றகரமான திட்டங்களுக்கும் வசதி செய்திருப்பதுடன் கூட, புதுமையான பஞ்சாயத்துகளின் மூலம் பொது அபிவிருத்தி வேலைகள் நடைபெறவும், பரவல் முறை நிர்வாகத்திற்கும் அடிகோலியிருப்பது, மக்களே தங்களது அபிவிருத்தி, முன்னேற்றக் காரியங்களில் பெரும் பங்கு கொண்டு சுய ஆட்சிக்குப் பயிற்சி பெறவும், வழி வகுத்ததாகும், ஆதலால் பெரிதும் பாராட்டுதற்குரியதாகிறது என்று தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

MR. CHAIRMAN : The House will now adjourn and meet again at 10 a.m. to-morrow.

The House then adjourned.

V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

* 298. *Annual Financial Statement for* 1960–61 *and Supplementary Financial Statement for* 1959–60 *of the Madras State Electricity Board.*

** 299. *Notification issued with G.O. Ms. No.* 4990, *Industries, Labour and Co-operation (Labour), dated 24th December* 1959, *regarding further postponement of the licensing provision under the Madras Beedi Industrial Premises (Regulation .of .Conditions .of Work) Act,* 1958 (*Madras Act XXXII of* 1958).